# அன்புநெறியினர் வாழ்க்கை

சுந்தரேச வாண்டையார்

அமுதன்

A.No. 17191
Q:23 4613

மணிவாசகர் நூலகம்
சிதம்பரம்

# அன்பு நெறியினர் வாழ்க்கை

46/3

லெ. இராமநாதன், எம்.ஏ.,
தமிழ்ப் பேராசிரியர்,
24-A, புது வீடு,
கோகலே ஹால் தெரு,
சிவகங்கை - 623 560.

கல்வெட்டு ஆராய்ச்சிக்கலைஞர்

**வித்துவான் வை. சுந்தரேச வாண்டையார்**



# முன்னுரை

கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்ரு டொழாஅ ரெனின்

என்பது தமிழ்மறை. ஒரு நாட்டாரின் மனப்போக்குக்கு ஏற்பவே அவர்தம் மொழி அமைப்பும் இலக்கியங்களும் அமையுமென்பது அறிஞர் பலரும் அறிந்ததே. நம் தமிழ் நாட்டவர் பண்டு தொட்டே கல்வியே மக்களுக்குக் கண் என்றும், அக்கண்ணுற் பெறும் பயன் இம்மை வாழ் வைச் செம்மையாய் நடாத்தி உலகப் பற்றற்று மெய்ப் பொருளையுணர்ந்து அவனே வழிபடலேயாம் என்னும் உறுதி கொண்டவர். இதனுலன்ரே தமிழ் மக்களின் சேம வைப் பாகவுள்ள தொல்காப்பியம் என்னும் செந்தமிழ் இலக்கண நூலில்,

காமஞ் சான்ற கடைக்கோட் காலே
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே

என்ற நூற்பா எழுந்தது. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டு மற்றீண்டு வாரா நெறித் தலைப்படுவது இயல்பாதலின் அதுவே நம் தண்டமிழ்க் கல்வியின் சிறந்த நோக்கமாகும்.

அது நோக்கமாகவே நம் தமிழ் மொழியை உண்மையில் பயில்வோர் பிறவியின் பயனையளிக்க வல்ல செந்நெறிகளைத் திறம்படக் கூறும் நூல்களையே பெரிதும் விரும்பிப் பயில்வார்கள். அங்ஙனம் பயன் பெறுமாறு வழிகாட்டும் நூல்கள் பலவற்றுள் தலைசிறந்த நூல்களாகிய திருத்தொண்டர் புராணம் முதலானவைகளை ஆதாரமாகக் கொண்டு யான் எழுதி வெளியிட்டுள்ள கட்டுரைகளின் தொகுப்பே அன்பு நெறியினர் வாழ்க்கை என்னும் இந்நூல் ஆகும். இந்நூலைக் கற்போர் தமிழின் சுவையை அறிந்து இன்புறுதலோடு தெய்வபக்தியும் கைவரப் பெறுவோராவர் என்பது எனது நம்பிக்கை. எனது மகள் வித்துவான். கரும்படுசொல்லி எழுதியுள்ள காரைக்கால் அம்மையார், மங்கையர்க்கரசியார் முதலான கட்டுரைகளையும் அவர் விருப்பப்படி இதில் சேர்த்துள்ளேன். இம் முயற்சியில் என்னை ஊக்குவித்த மணிவாசகர் நூலகத்தார்க்கு என் நன்றி உரியதாகும்.

அண்ணாமலைநகர்
24—2—1962

வை. சுந்தரேச வாண்டையார்

# பதிப்புரை

தமிழகத்தில் முறையாகத் தமிழ் பயின்று சரித்திரம், இலக்கியம், இலக்கணம் கல்வெட்டு ஆராய்ச்சி இவைகளில் நல்ல திறன் படைத்தவர் வித்துவான் சுந்தரேச வாண்டையார். அவர்கள் அரிதின் முயன்று தாம் கற்றறிந்தவற்றை மக்களுக்கு எளிதில் புரியும்படி சொல்லவும் எழுதவும் வல்லவர். வாண்டையாரின் கட்டுரைத் தொகுப்பாகிய இந்நூலை எங்கள் முதல் நூலாக வெளியிடுவதில் மகிழ்ச்சியும் பெருமையும் அடைகின்றோம். அன்பு நெறியினர் வாழ்வினை வகைப்படுத்தி நல்வழி காட்டும் இந்நூலினை தமிழ் உலகம் படித்துப் பயன்பெறும் என்று நம்புகிறோம். நம் நூலகத்தின் வாயிலாகத் தொடர்ந்து கல்வெட்டு ஆராய்ச்சி நூல்களையும் வெளியிட வாய்ப்பளித்த வாண்டையார் அவர்கட்கு எங்கள் நன்றி.

17—5—'62
சிதம்பரம்

மணிவாசகர் நூலகத்தார்

# இந்நூலாசிரியரைப் பற்றி

## நாவலர், பண்டித,
## ந. மு. வேங்கடசாமி நாட்டார்
## அவர்களின் கருத்துரை

திரு. வை சுந்தரேச வாண்டையார் சில சங்கங்களிற் செய்த சொற்பொழிவுகளைக் கேட்டும் பத்திரிகையில் எழுதியுள்ள சிலகட்டுரைகளைப் படித்தும் மகிழ்ந்திருக்கின்றேன். அக்கட்டுரைகள் கல்வெட்டுக்களைத் துருவி ஆய்ந்து கண்ட வரலாற்றுச் செய்திகள் அமைந்தனவாகும். எனவே அவர் உண்மைவரலாற்று ஆராய்ச்சியில் மிக்க விருப்பமும் உழைப்பும் உடையரென்பது போதரும். அதனோடு அவர் தமிழ் நூற்களில் நன்கு அழுந்திய பயிற்சியும் கட்டுரை யெழுதும் ஆற்றலும் சொல்வன்மையும் வாய்ந்தவராவார்.

# உள்ளுறை

காணிக்கை

அருட்சோதி அன்பர்

பழ. சண்முகம் அவர்கட்கு

# அன்பு நெறியினர் வாழ்க்கை

## 1. கண்ணப்பர்

"கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற
வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ"

எனக் கண்ணப்பரது அன்பை வாதவூரடிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார். வாதவூரடிகளை வாதவூர் அன்பர் என்று சிறப்பித்துச் சொல்லுவது உண்டு. அன்பர் என்பது அன்பு என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். எனவே அன்பே தம் பண்பாகக் கொண்டவர் அவர் என்பது போதரும். அவரது அமுத மொழியாகிய திருவாசகம் ஓதுவார் உள்ளத்தை உருக்கும் அருமை பெருமை வாய்ந்தது. உருகி உருகி அழுது பாடிய பாடல்கள் அவை. அவரை அழுது அடியடைந்த ஆன்றோர்

என்பர் பெரியர். அத்தகைய பேரன்பு வாய்ந்த வாதவூரடிகளாரும் தமக்குக் "கண்ணப்பன் ஒப்ப தோர் அன்பு இல்லை" என்று ஏக்கறுவாராஞல் (ஏக்கறுதல்—ஆசையால் தாழ்தல்) கண்ணப்பரது அன்பின் பெருமையை எடுத்து இயம்ப யாரால் இயலும் ?

"அன்பென்ப தொன்றின் தன்மை அமரரும் அறிந்ததன்ருல்" என்ருர் கம்பர். பொது மக்களிடம் தோன்றும் அன்பின் செய்கையை அமரரும் அறிதற்கு அரிது என்ருல் முன்புசெய்தவத்தின் ஈட்டம் எடுத்துக்காட்டிய முடிவிலா இன்பமான அன்பின் இயல்பை எம்மனோரால் நினைத்தற்கும் மிக அரியதே. "அன்பே சிவம்" என்ருர் திருமூலர். அந்தச் சிவபெருமானே கண்ணப்பருடைய அன்பின் பெருமையை அறியவல்லார். அதனாலன்ரோ "கண்ணப்பர் பெருமை காளத்தியார் அறிவர்" என்ருர் உய்யவந்ததேவ நாயனுரும்.

அன்பு என்பது தொடர்பு உடையார்மாட்டு நிகழும் உள்ள நெகிழ்ச்சி என்பர். ஊனத் தொடர்புடைய மனைவி, மக்கள், சுற்றத்தார், நண்பர் முதலியோரிடம் நிகழும் அன்பினும், உடல், கருவி, உலகம், இன்பம் என்பவற்றை உயிர்களுக்கு அளித்தருளும் இறைவனிடம் உண்டாகும் அன்பே சிறந்ததாகும். இத்தகைய அன்பு அறிவின் பயனுக ஏற்படும். அந்த அறிவுதானும் பல்லூழிகாலம் பல பிறவிகளிலும் செய்த பதிபுண்ணிய மேலீட்டினுல் விளையும். அப்படித் தோன்றிய அன்பும் நிகழும் முறையிலே மந்த தரம், மந்தம், தீவிரம், தீவிர தரம் என நான்கு வகைப்படும். அவற்றிற்கு உவமை முறையே வாழைத் தண்டிலும், ஈரவிறகிலும்,

உலர்ந்த விறகிலும், கற்பூரத்திலும் நெருப்புப் பற்றுவது ஆகும். நெருப்பில் சூடுண்டபோது உருகிச் சூடு விலகியபோது பின் இறுகும் அரக்குப்போல, ஒருவர்பால் உதவி பெற்றபோது தோன்றிப் பின் விரைவில் மறக்கும் அன்பு தாழ்ந்ததாகும். அங்ஙன மன்றி, தோன்றியது தொட்டு இடையறாது முருகி வளர்ந்து நிறைந்து நிற்கும் அன்பே தலையன்பாகும். இதனைத் தைலதாரை போன்ற அன்பு என்றும் கூறுவது உண்டு. அத்தகைய அன்புக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளவர் கண்ணப்பர்.

அவர் பிறந்தது வேடர்குலத்தில். அவ்வேடர் வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர். தம்மிடம் அச்சமும், அருளும் என்றும் அடையாதவர். 'கொல், எறி, குத்து' என்பன போன்ற சொற்களன்றி மென்சொல் அறியார். ஆறலைத்து உண்ணும் தொழிலினர். அவர்களது தலைவனும் கண்ணப்பரது தந்தையுமாகிய நாகன் என்பானோ குற்றமே குணமாக வாழ்பவன். கொடுமையே தலைநின்றுள்ளவன். அத்தகைய வேடர் குலத்தில் பேரன்பினராகிய கண்ணப்பர் தோன்றியது பெரிதும் வியக்கத்தக்கதே. அதனாலேதான் பான் மதியை உவரி ஈன்றது போலத் தத்தை என்பவள் கண்ணப்பரை ஈன்றாள் என்று குறிப்பிட்டார் சேக்கிழார்.

கண்ணப்பர் பிறந்து வேட்டுவச் சிறுவர்களோடு பயின்று, தாம் பிறந்த குலத்திற்கும் கூடியிருந்த கூட்டத்திற்கும் ஏற்பக் கொடுமையான விளையாடல்களையே செய்துவந்தார்.

"கடுமுயற் பறழி ஞேடுங் கானஏ னத்தின் குட்டி
கொடுவரிக் குருளை செந்நாய் கொடுஞ்செவிச் சாபமான
முடுகிய விசையி லோடித் தொடர்ந்துடன் பற்றி முற்றத்
திடுமரத் தாளில் கட்டி வளர்ப்பன எண்ணி லாத,"

(கண்ணப்ப நாயனுர் புராணம்: செய்யுள் 26)

என்று சேக்கிழார் அருளிச்செய்துள்ளனர். நாக னும் மூப்பினுல் தளர்வடைந்து தன் ஆட்சி உரிமை யைத் திண்ணனுக்கு வழங்கினுர். அதனை ஏற்றுக் கொண்ட திண்ணனுர் ஏனைய வேடரோடு கன்னி வேட்டைக்குச் சென்ருர்.

எல்லா வேடர்களையும்போலவே வனவிலங்கு களை அஞ்சாது எதிர்த்து எய்து கொன்ருர். வேட்டை இடையே பலவேடர்களையும் தப்பி, வலை களை அறுத்துக்கொண்டு ஓடிய பன்றியைத் திண் ணனுர் தொடர்ந்து சென்ருர். பன்றி நெடுந்தூரம் ஓடி ஒரு மரச்செறிவில் வழி தெரியாது திகைத்து நின்றது. அத்துணைத் தூரம் ஓடிவந்து தம்மை அலக்கழித்த பன்றியை எட்ட இருந்து அம்பால் எய்து வீழ்த்துவது ஆண்மை மிக்க புகழ் அன்று என்று கருதிச் சுரிகையால் குத்திவீழ்த்தினுர் திண் ணனுர். இச்செய்கைகளால் அங்கிகழ்ச்சி வரையில் அவர் குலத்துக்குரிய முரட்டுத்தனமும் தறுகண் மையும் தலையெடுத்து நின்றமை பெறப்படும்.

தம்மைப் பின்தொடர்ந்த இருவரில் காடனை நோக்கிப் பன்றியைப் பக்குவஞ்செய்யப் பணித்து, நாணனை அழைத்துக் கொண்டு அவன் வழிகாட் டச் சென்று, காளத்தி மலையைக் கண்ட மாத்திரத் தில் திண்ணனுருடைய பண்டைய இயல்பெல்லாம் பறிபோயின. அதனை,

"ஆவதென் இதனைக் கண்டிங் கணைதொறும்
என்மேல் பாரம்
போவதொன் றுளது போலும் ஆசையும்
பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற
விரையா நிற்கும்
தேவரங் கிருப்ப தெங்கே போகென்றார்
திண்ண னார்தாம்,"

(பெரிய புராணம்—கண்ணப்ப நாயனார். செய்யுள் 97)

எனச் சேக்கிழார் எடுத்துக் காட்டியிருக்கும் அருமை காணத்தக்கது. பொன்முகலி ஆற்றில் இறங்கிய உடனே அவர் சிந்தை தெளிவடைந்தது என்பதை "ஆற்றின் தெளிபுனல் இழிந்து சிந்தை தெளிவுறும் திண்ணனார்" என்று சேக்கிழார் அருளிச் செய்துள்ளார். காளத்தி மலையைக் கண்டவுடன் அவர் மனத்தில் எல்லையற்ற பேரன்பு பொங்கி யெழுந்தது; என்பு நெக்கு உருகியது. உள்ளத்திலே பெருவேட்கை எழுந்தது. அதனை,

"முன்புசெய் தவத்தின் ஈட்டம் முடிவிலா இன்பமான
அன்பினை எடுத்துக் காட்ட அளவிலா ஆர்வம்பொங்கி
மன்பெருங் காதல்கூர வள்ளலார் மலையை நோக்கி
என்புநெக் குருகிஉள்ளத் தெழுபெரு வேட்கை யோடும்

என்று சேக்கிழார் அருளியிருக்கிறார். இத்திருப் பாட்டில் முன்புசெய் தவத்தின் பெருக்கே அன்பினை எடுத்துக் காட்டியது என்றும், முடிவிலாத இன்பமான அன்பு என்றும், சேக்கிழார் குறிப்பிட்டுள்ளமை கருத்தில் கொள்ளத்தக்கது.

குடுமித் தேவரைக் காணும் பொருட்டுத் திண்ணனார் மலைமேலேறிச் சென்றது தத்துவங்கள் என்னும் படிகளில் ஏறி அவற்றை இயக்கும் சிவத்தை அணையப் போவார் போன்று இருந்தது

என்று சேக்கிழார் அருளியது பெரிதும் பாராட்டக்கூடியது. மலைமேல் ஏறி இறைவனைக் காண்பதன் முன்னம் அங்கணர் கருணைகூர்ந்து அருள் திரு நோக்கம் எய்தியதததனால் திண்ணனார் தம் பிறப்பின் சார்பு அனைத்தும் நீங்கப்பெற்றவராய், பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவமானார் என்று அருளிச் செய்தார் அருண்மொழித் தேவர். ஈண்டு பொருவில் அன்புருவமானார் என்றது பெரிதும் நினைவில்வைக்கத் தக்கது. இணையற்ற அன்பே வடிவமானார் என்பது இதன் பொருள். ஆதலால் கண்ணப்பரை அன்பின் திருவுருவம் என்று கூறலாம். கண்ணப்பன் ஒப்பதோர் அன்புடையாரைக் காணல் அரிது. ஆதலால் தான் அவர் அன்புக்கு, 'பொருவில்' (ஒப்பு இல்லாத) என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

இறைவன் அருட்குறியைக் கண்ட கண்ணப்பர் அவரை விரைந்து ஓடித் தழுவி மோந்து, நெடுநேரம் பெருமூச்சுவிட்டு நின்று, வடிவெலாம் புளகம் பொங்க, மலர் கண்ணீர் அருவிபாய அடியேனுக்கு இவர்தாம் இங்கு அகப்பட்டார் அச்சோ என்றார். பின்னும் அவர் பேசிய பேச்சுக்கள் படியிலாப் பரிவு தானோர் படிவமாம் பரிசு தோன்ற அமைந்தன. எனவே உருவம் அன்புமயமானதன்றிப் பேச்சும் அன்புமயமானது என்பது இங்கே உணரலாகும்.

இனி அவரிடம் தோன்றும் செயல்கள் அனைத்தும் அன்புமயமே ஆயின. அவர் மனமும் தம்மையே மறந்து இறைவனையே நினைக்கும் நிலைமையை அடைந்தது என்பது பின்னே நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் உணரக் கிடக்கின்றது. காளத்தி

நாதரை வழிபடுதற்குரிய முறைகளை நாணனிடம் கேட்டறிந்தார். காடன் பக்குவப்படுத் திவைத் திருந்த இறைச்சியைச் சுவைத்துப் பார்த்து நறி யனவான இறைச்சிகளை எடுத்துக்கொண்டு பொன்முகலிப் புனலை வாயால் முகந்துகொண்டு காட்டுப் பூக்களைப் பறித்து இறைவன் திருமுடியில் சூட்டுவதற்கு எனத் தம் தலையில் சொருகிக் கொண்டு மீண்டும் சென்றார்.

சென்று, இறைவன் திருமுடியில் முன்னமே இருந்த நிர்மாலயங்களைச் செருப்புக் காலால் தள்ளி னார். வாயில் இருந்த நீரை உமிழ்ந்து திருமுழுக்கு ஆட்டினார். தம் தலையில் இருந்த பூவைத் தூவினார். ஊன் அமுதைத் திருமுன் வைத்து உண்ணு கென்று கெஞ்சினார். சிவபெருமானும் இப்பூசனையை ஏற்று மகிழ்ந்தார். இரவெல்லாம் கண் இமையாது இறைவன் அருகில் நின்று காவல் செய்தார். யான், எனது என்ற இருவகைப் பற்றையும் அழித்து விளங்கியது அவரது அன்பு. இவரது செயலை அறிந்த தாய்தந்தையர் இவரது மனநிலையை மாற் றற்குச் செய்த மந்திர தந்திரங்கள் எல்லாம் பயன் படா ஆயின.

அதனை,

> "முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
> இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கைத்
> தன்பரிசும் வினைஇரண்டும் சாருமல மூன்றுமற
> அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரே,"

என்று அருளிச் செய்த அழகு பாராட்டத்தக்கது. இப்பாட்டில் இறைவன் அருள் நோக்கால் உடலின் இயல்பும், இருவினையும், மும்மலமும் நீங்கப்பெற்று அன்பு வடிவம் ஆயினார் என்று கூறியிருப்பதும்

நோக்குதற்கு உரியது. இவரது வழிபாட்டை அனுசிதம் என்று கருதி வருந்தி முறையிட்ட சிவகோசரியார் கனவில் தோன்றி இறைவன் அருளிச்செய்த சொற்களும் நினைவில் கொள்ளத்தக்கன.

அவற்றைச் சேக்கிழார்,

> "அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்
> அவனுடைய அறிவெல்லாம் நமைஅறியும் அறிவென்றும்
> அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாம்என்றும்
> அவனுடைய நிலைஇவ்வா றறிநீஎன் றருள்செய்தார்"

என்று அருளியுள்ளமை காண்க. ஐந்து நாள் இவ்வாறு வழிபட்டபின் ஆறும் நாளில் இவரன்பைச் சிவகோசரியருக்குக் காட்டும் பொருட்டு இறைவன் தன் கண்களில் ஒன்றில் உதிரம்பாய இருந்தனன். அதைக் கண்ட திண்ணனூர் துடித்துப் பலவாறு வருந்திப் புலம்பிப் பலவகை மருந்துகள் செய்தும் பயன்படாமை கண்டு இறுதியில் ஊனுக்கு ஊனென்னும் உரையை நினைத்து தம் கண்ணை இடந்து இறைவன் கண்ணில் அப்பினூர். உடனே குணமானமை கண்டு மகிழ்ந்தார். மீண்டும் இடக் கண்ணிலும் உதிரம் வரக்கண்டு அஞ்சாதவராய் 'மருந்து கைகண்டேன். இன்னும் ஒரு கண் எனக்கு உண்டு,' என்று கண்ணைத் தோண்ட ஒருப்பட்டார். மற்றைக் கண்ணையும் அப்புவதற்குத் தோண்ட முயன்றூர். அப்பொழுது இறைவன் இவரைத் தடுத்தார்; கண்ணைத் தோண்ட முயன்ற கையைப் பற்றிக்கொண்டு, **"நில்லு கண்ணப்ப!"** என்று மொழிந்தருளினூர். "என் வலத்தில் மாறு இலாமல் நிற்க" என்று அருள்புரிந்தார். **'கண்ணிற் சிறந்த உறுப்பில்லை'** என்பர். அக்கண்கள் இரண்டையும் சிறிதும் தயங்காது பிடுங்கி இறைவன் திருவுரு

வில் அப்பத் துணிந்த இவரது அன்பின் திறந் தான் என்னே! இவரது அன்பின் பெருமையை உணர்ந்தே,

"வாய் கலசமாக வழிபாடு செயும்
வேடன்மல ராகு நயனம் காய்கணை
யினாலிடந்து ஈசனடி கூடு காளத்திமலையே"

எனத் திருஞான சம்பந்தரும்,

"பொருள்பற்றிச் செய்கின்ற பூசனைகள்போல் விளங்கச்
செருப்புற்ற சீரடிவாய்க் கலசமூ னமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்க மாடாமோ"

என மாணிக்கவாசகரும் ஏனைய சான்றோர்களும் பாராட்டியுள்ளனர்.

### அருஞ்சொற் பொருள்:

கன்னி வேட்டை—முதல்வேட்டை
இருவினை—நல்வினை, தீவினைகள்
மும்மலம்—ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்ற மூவகை மலங்கள்
அநுசிதம்—தகாதது
நிர்மாலியம்—பூசித்துக் கழித்த பூ

## 2. காரைக்காலம்மையார்

“யாவர்க்கும் தந்தைதாய் தம்பிரான் தனக் கஃதிலான்” ஆகிய இறைவனுக்கு ஓர் அம்மை யாகியவர் காரைக்காலம்மையார். “தெய்வந் தொழாள் கொழுநற் றொழுதெழுவாள்” என்று கற் புடைய மாதர்க்கு வள்ளுவர் கூறிய இலக்கண வரம்பைக் கடந்து, தெய்வத்தையும், கணவனையும் ஒருங்கே தொழுது, கடவுட் பக்தியையும் கற்பு நெறியையும் ஒருங்கே பேணி, உயர்நெறி நின்ற வர் காரைக்காலம்மையார். “எத்தொழிலைச் செய் தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக் கும் மோனத்தே” என்ற ஆன்றோர் மொழிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக, பொருவிடையார் திரு வடிக் கீழ் ஓங்கிய அன்புறு காதல் ஒழிவின்றி மிகப்பெருகப் பாங்கில் வரும் மனைஅறத்தின் பண்பு வழாமையில் பயின்றவர் காரைக்காலம்மை யார். மாதர் பேதையர் என்னும் கூற்றுப் பேதைமை யுறும்படி இயல் இசைப் புலமை நிரம்பி, இல்லற மாண்பு வாய்ந்து, இறை யுணர்ச்சி நிரம்பி, வாழ்ந்தவர் காரைக்காலம்மையார்.

இவர் காரைக்கால் பட்டினத்தில் வணிகர் குலத் தலைவன் தனதத்தன் செய்த தவத்தின் பய னாய், திருமகளே பிறந்ததுபோல் அவதரித்தார்.

புனிதவதி யென்னும் பெயரிடப் பெற்ருர். பிறந்து மொழி பயிலத் தொடங்கிய பொழுது முதல், உடையவர்பால் நிறைந்த அன்பொடு, அழகின் கொழுந்து வளர்வதுபோல் வளர்ந்தார். இல்லிகவாப் பருவம் எய்தினுர். தந்தையாகிய தனதத்தன் குலத்தாலும் செல்வத்தாலும் தன்னேடொத்தவனுகிய நாகையில் வாழ்ந்த நிதிபதி என்ற வணிகனது மகன் பரமதத்தனுக்குப் புனிதவதியாரை மணம் புரிவித்தான். தங்கள் குடிக்கு அருமைப் புதல்வியார் ஆகையினுல் அவரை நாகைக்கு அனுப்ப மனமிசையாது கணவனெடு காரைக்காலிலேயே இல்வாழ்க்கை நிகழ்த்துமாறு, தன் மாளிகைக்கு அருகிலேயே அணிமாடம் ஒன்று அமைப்பித்து, மகளுக்குக் கொடுக்க வேண்டிய சீதன வரிசைகளெல்லாம் சிறப்ப நல்கினுன். நிதிபதி மைந்தனும் அன்பும் அறனும் உடையனுய்ப் பண்பும் பயனும் பொலிய இல்லறம் நடத்தினுன். புனிதவதியாரும் அவனது இல்வாழ்க்கைக்கு அருந்துணைவராய்ச் சிவபெருமான் திருவடிக்கீழ் ஓங்கிய அன்புறு காதல் ஒழிவின்றி மிகப்பெருக, மனையறத்தின் பண்பும் வழாமல் வாழ்ந்து வந்தார்.

புனிதவதியார் சிவனடியார்கள் வரின் அவர்க்கு நல்ல திருவமுதளிப்பர். அவர் விரும்பியபடி செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் தம் தகுதிக் கேற்பக் கொடுப்பர். இங்ஙனம் வாழுநாள் பரமதத்தனுக்கு மாங்கனிகள் ஓரிரண்டு அவன்பால் வந்தார் சிலர்கொடுத்தனர். பரமதத்தன் அவர்கட்குத் தன்னு லாகவேண்டியதைச் செய்து அவர்களை அனுப்பினன். மாங்கனிகளை மனையிற் கொடுக்கப் பணித்தனன். அம்மையார் அக்கனி

களை வாங்கி வைத்திருந்தார். ஒரு சிவனடியார் மிகப் பசித்தவராய் மனையினுட் புகுந்தார். திருவமுது ஆகியிருந்தது. கறியமுது ஆகும்வரை அடியவர் பசி தாங்க மாட்டார் என அம்மையார் உணர்ந்தார். நாதன் தன் அடியவரது பசி தீர்ப்பேன் என அம்மையார் அவர்க்கு அமுது படைத்தார். "விடையவன் தன் அடியாரே பெறலரிய விருந்தானால் பேறிதன்மேல் இல்லை" என்னும் அறிவினராகி, அம்மையார் கணவன் "வைக்க" எனக் கொடுத்தனுப்பிய மாங்கனிகள் இரண்டினில் ஒன்றை அடியவர்க்குப் படைத்து மனமகிழ்ச்சியொடு அமுது செய்வித்தார். மூப்புறுமத்தளர் வாலும் முதிர்ந்து முழுகிய வேட்கைத் தீப்பசியின் நிலையாலும் அயர்ந்தணைந்த திருத் தொண்டர் மாங்கனியோடு அமுதுண்டு அம்மையின் செயலைப் பாராட்டிச் சென்றார்.

அவர் சென்றபின் பரமதத்தன் நடுப்பகலில் மனைக்கு வந்து நீராடி அடிசில் உண்ண அமர்ந்தான். கற்புடைய புனிதவதியாரும் 'கடப்பாட்டில் ஊட்டுவாராய்' இன்னடிசிலைக் கறிகளுடன் முறைப்படி இட்ட பின், கணவன் வைப்பித்த மாங்கனிகளில் எஞ்சியிருந்த ஒன்றைக் கலத்துப் படைத்தார். உண்டான் வணிகன். அதன் சுவையின் ஆராமையினால் இது போன்றது "இன்னொரு பழம் இருக்கின்றதே அதனையும் இடுக" என்றான். கொண்டு வருவார்போல் அம்மையார் சென்றார். கனிமேல் கணவன் கொண்ட விருப்பத்தை உணர்ந்தார். அது வாய்க்காவிடின் அவன் மனம் மிக வருந்தும் என்பதை அறிந்தார். ஆனால் அடியவர்க்குப் படைத்த கனி மீண்டும் எவ்வாறு வரும்?

அம்மருங்கு நின்றயர்வார் அருங்கனிக்கங் கென்செய்வார்
மெய்ம்மறந்து நினைந்துற்ற விடத்துதவும் விடையவர்தாள்
தம்மனங்கொண் டுணர்தலுமே அவரருளால் தாழ்குழலார்
கைம்மருங்கு வந்திருந்த ததிமதுரக் கனியொன்று.

அதனைக் கொண்டுவந்து மகிழ்ச்சியொடு இட்டார். பரமதத்தன் உண்டான். முன் உண்டதினும் சுவை மிக்கிருந்தது. "இது, தான் முன்தரு மாங்கனி யன்று; மூவுலகினும் பெறற்கரிது. பெற்றதுவே றெங்கு?" என்று கேட்டான். இது கேட்ட அம்மை யார் நடுங்கினர். "அருளுடையார் அளித்தருளுஞ் செவ்விய பேர் அருள் விளம்புந் திறமன்று"; கண வன் உரைதட்டுதல் கற்புநெறிக்குத் தக்கதன்று. ஆதலால் தரும சங்கடத்தில் அகப்பட்டார். வேறு வழியின்மையால் செய்தபடி சொல்வதே கடன் என்று துணிந்து, கனி கொடுத்தவர் இறைவன் என்று கூறினர். ஈசனருளால் கிடைத்தது எனக் கூறக்கேட்ட கணவன் அதனை நம்பாமல், "அங்ங னமாயின் இன்னுமொருகனியை நீ அழைத்துத்தா" என்றான். அம்மை அப்புறம் சென்று இறைவனைப் பரவி, "ஈங்கி தளித் தருளீரேல் என்னுரை பொய் யாம்" என்று வேண்ட மாங்கனி யொன்று அம்மை கைக்கு வந்தது. கணவன் கைக் கொடுத்தார். அதி சயித்து வாங்கினன், மறைந்தது. அஞ்சினன். மனம் தடுமாறினன். அம்மையைத் தெய்வம் என்று கருதினன். அம்மையை விட்டு நீங்கத் துணிந்தான். நிகழ்ந்ததை யார்க்கும் தெரிவித்திலன். தொடர் பின்றி ஒழுகலானன். சின்னாற் கழித்து திரைகட லோடித் திரவியம் தேடுவேன் என்று சுற்றத்தார்க் கறிவித்து மரக்கலம் அமைத்து வெளிநாடுகளுக்குச் சென்றான். பெரும்பொருள் ஈட்டினன். காரைக்

காலுக்குத் திரும்பாமல் பாண்டி நாட்டில் ஒருபட்டி னத்தில் இருந்தான். அங்குக் குடியானுன். வேருெரு பெண்ணை மணந்தான். முதல் மனைவி யின் செய்தியை யார்க்கும் வெளியிடாமல் மறைத்து ஒழுகினுன். ஒரு பெண் மகவு பெற்ருன். தெய்வமாகத் தான் கருதிய மூத்த மனைவியின் பெயரையே அதற்கு இட்டான். இது நிற்க.

பரமதத்தன் பாண்டி நாட்டில் புது மணம் புணர்ந்து வாழும் செய்தியை அம்மையின் சுற்றத் தார் அறிந்தனர். அம்மையை அழைத்துக்கொண்டு அங்குச் சென்றனர். அம்மையாரோடு தாம் வந் துள்ள செய்தியை அவனுக்கு ஆள் மூலம் அறி வித்தனர். கேட்ட வணிகன் அஞ்சினுன். தன் புது மனைவியையும் பெண்மகவையும் உடனழைத்துக் கொண்டு,அவரை எதிர்கொள்வேன் என வந்தான். அம்மையைக் கண்டு மனைவி மக்களோடு அவர் அடியில் வீழ்ந்தான். "யான் உமதருளால் வாழ் வேன். இவ்விளங் குழவி தானும் பான்மையால் உமது நாமம்," என்று வணங்கினுன். கணவன் வணங்கக் கண்ட அம்மை அஞ்சிச் சுற்றத்தார்பால் ஒதுங்கி நின்ருர். சுற்றத்தார், "நாணி நின் மனை வியை வணங்குவது என்?" என்றனர். அவன்,

"மற்றவர் தம்மை நோக்கி "மானுட மிவர்தா மல்லர்
நற்பெருந் தெய்வ மாதல் நானறிந் தகன்ற பின்பு
பெற்றஇம் மகவு தன்னைப் பேரிட்டேன் ஆத லாலே
பொற்பதம் பணிந்தேன் நீரும் போற்றுதல் செய்மின்"

என்ருன். சுற்றத்தார் வியந்து நின்றனர். வணிகன் மாற்றங்கேட்ட அம்மையார் இறைவன் திருவடியை வணங்கி, சிந்தை ஒன்றிய நோக்கில் மிக்க உணர்வு கொண்டு உரை செய்கின்ருர்.

''ஈங்கிவன் குறித்த கொள்கை இதுஇனி இவனுக் காகத்
தாங்கிய வனப்பு நின்ற தசைப்பொதி கழித்திங் குன்பால்
ஆங்குநின் தாள்கள் போற்றும் பேய்வடி வடியே னுக்குப்
பாங்குற வேண்டும்'' என்று பரமர்தாள் பரவி நின்றார்.''

அப்பொழுது இறைவன் அருளினாலே மேல்நெறி உணர்வு பெற்றார். தாம் வேண்டியவாறே அருளப் பெற்றார். உடம்பில் இருந்த ஊனுடை வனப்பை யெல்லாம் உதறினார். எலும்புருவம் ஆனார். பேய் வடிவம் பெற்றார். தாம் பெற்ற ஞானத்தின் பயனால் எம்பெருமானை **அற்புதத் திருவந்தாதியில்** பாடினார். அவன் திருவடிகள் போற்றும் நற்கணத்தில் ஒன்றானேன் என்று மகிழ்ந்தார். பின் **திருவிரட்டை மணி மாலை** பாடினார். கயிலையை நோக்கி நடந்தார். கண்டவர்கள் வியப்புற்றஞ்சி ஓடினார்கள். இறைவன் என்னை அறிந்தால் போதும். மற்றவர்களுக்கு நான் எவ்வடிவம் ஆனால் என்ன வென்று நினைந்து வடதிசை நோக்கிச் சென்றார். கயிலையின் அருகடைந்தார். அங்கிருந்து காலால் நடப்பதைத் தவிர்ந்து தலையால் நடந்து சென்றார். இவ்வாறு தலையால் நடந்து மலையேறுங்கால் எம்பிராட்டியின் திருவருள் நோக்கம் அம்மையார் மேற்பட்டது. அம்பிகை வியந்து தம்பிரானைத் ''தலையினால் நடந்திங்கேறும் எம்பெருமானோர் எற்பின்யாக்கை அன்பு என்னே'' என்றாள். இறைவன் ''வருமிவள் நம்மைப் பேணும் அம்மைகாண் உமையே; மற்று இப்பெருமை சேர்வடிவம் வேண்டிப் பெற்றனள்,'' என்றார்.

பின் அருகு வந்தணைந்த அம்மையை நோக்கி **''அம்மையே''** என்னும் செம்மை ஒருமொழி உலகமெல்லாம் உய்யவே அருளிச் செய்தார். அங்கணன்

அம்மையே என அருளிச் செய்ய அம்மையார் அப்பா என்று திருவடியில் பணிந்து வீழ்ந்தெழுந் தார். நம்பால் இங்கு வேண்டுவதென் என்று வின விஞன். அதற்கு அம்மை,

"இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்ருர்
"பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னை
    என்றும்
மறவாமை வேண்டும் இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து
    பாடி
அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க"

என்ருர். இறைவன் அவ்வாறே கூடுமாறு அருள் கொடுத்துத் தென்திசையில் பழன மூதூரிலுள்ள ஆலங்காட்டில் நாம் ஆடும் நடனத்தை நீ கண்டு இன்பம் பெற்று எப்போதும் நம்மைப் பாடுவாய் என்றருளினர். அம்மையும் வணங்கி விடை பெற்று மீண்டு திருவாலங்காட்டினைத் தலையால் நடந்தடைந்தார்.

ஆலங்காட்டில் அண்டமுற நிமிர்ந்தாடுங் கோலங்காண்பொழுது "கொங்கை திரங்கி" என்ற மூத்த திருப்பதிகத்தை இசையொடு பாடினர். திரு நடனங் கண்டு வணங்கும் பெருங்காதல் எழுந் தோங்க "எட்டியிலவம்" என்னும் திருப்பதிகம் பாடினர். அம்மையே என்று தாம் அழைக்கும் பேறு பெற்ருரை இறைவன் தான் செய்தருளும் தாண்டவத்தில் எடுத்தருளிய திருவடிக் கீழ் என் றும் இருக்கும்படி திருவருள் புரிந்தார். அப்பேறு பெற்ருரின் சிறப்பை முழுவதும் பரவும் அளவு யார் பால் அமைந்துள்ளது?

அம்மையார் இயல்இசைத் தமிழ்களில் வல்ல வர் என்பது அவர் அருளிச் செய்த இரண்டு

பிரபந்தங்களாலும் தெளிவாகிறது. "வெண்பாவிற் புகழேந்தி" என்பார் கூற்று அம்மையாரின் அற்புதத் திருவந்தாதி வெண்பாக்களைப் பயின்றறியாதார் கூற்றேயாம். அம்மையார் பாடல் ஞானப் பழத்தின் சுவையாய் அமைந்தனவன்றிச் சொல் நோக்குப் பொருள் நோக்குத் தொடை நோக்கு நடை நோக்குகளால் சிறந்த செந்தமிழ் இலக்கியமாகவும் அமைந்துள்ளது

> "பணிஅணிவார் கழற்கடிமை பழகிவரும் பாங்குபெறத்
> தணிவில் மனக்காதல் ததும்பவரும் மொழிபயின்றார்"

என்று சேக்கிழார் கூறியதற்கு ஆதாரமாகவுள்ளது "பிறந்து மொழிபயின்ற" (அற்புதத் திருவந்தாதி: செய்யுள் 1) திருப்பாட்டன்றோ?

கணவனோடு இல்லற நெறியில் இயைந்து வாழும்போதும் கடமை தவறாது ஒழுகினரேயன்றித் தாம் இறைவனுக்கு ஆளென்பதை உணர்ந்து அவன்பாலே தம் அன்பு முழுவதையும் வைத்தொழுகினார் என்பது "அவர்க்கே...எஞ்ஞான்றும் ஆள்" (அற்பு. - 3) என்பதனால் அறியலாம்.

"இமைப் பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான்" என்று வாதவூரடிகள் அருளியதற்கு விரிவுரைபோல "வானத்தான் என்பாரும்" (அற்பு.-9) என்ற திருப்பாட்டு அமைந்துள்ளது.

அடியார் உறவைக்கொள்; அல்லார் உறவைத் தள் என்று "மறித்து மடநெஞ்சே" (40) என்ற பாட்டால் கூறுகிறார்.

**சுவை தருவன:—**

இறைவனது செங்கிற மார்பில் வெண்டலை மாலை கிடக்கும் அழகு செக்கர் வானத்தில் எங்கும் முழுமதி எழுந்தாற்போலும் என்று "அங்கண் முழு மதி" என்ற பாடலில் கூறியுள்ளார். பாம்பு பன்றிக் கொம்பையும் பிறைக்கொழுந்தையும் நோக்கி எது மதி என்று அறியாமல் திகைக்கும் என்பதைத் "திருமார்பிலே" (48) என்ற பாடலில் கூறியுள் ளது ஐயவணியின்பாற்படும்.

# 3. மங்கையர்க்கரசியார்

இவர் அம்பலந்தனில் ஆடுவார் அடித் தொண்டினின்றும் என்றும் பிறழாத செம்பியர் குலம் செய்த தவத்தால் தோன்றி, பாண்டியர் குலத்துள் புகுந்து, இரு மரபும் பெருமையுறச் செய்த பெரியார்.

இவரை வாழ்க்கைத் துணையாக வாய்க்கப் பெற்றக் கூன்பாண்டியன் (பின்னுல் நின்றசீர் நெடுமாற நாயனுரெனப் பெயர் பெற்றவன்) முன் செய்த தீவினை வயத்தினுல் மெய்வகை நெறியில் நில்லா வினை அமண் சமயத்தினை அறமென நினைத்து அதன் வழி நின்ருன். **“மன்னன் எப்படி வையகம் அப்படி”** என்ற முதுமொழிக் கேற்ப, **“பாண்டி நாடே பழம் பதி”** எனவும், **“சிவனது நாடெனவும்”** புகழப் பெற்ற தென்னுடு முழுவதும் சமண இருள் பரவி, “மன்னிய சைவ வாய்மை வைதிக வழக்கமாகும் நன்னெறி திரிந்து மாறி நவ நெறி நடந்தது.” பாண்டியர் தமிழ் நாட்டிலுள்ள பழம் பதிகளிலெல்லாம் அருகரது பாழியும் பள்ளி யுமே நிறைந்து இருந்தன. அதனுல் அந் நாட்டு மக்கள் அனைவரும் சமய நூலின் அளவிலே அடங்கிச் சைவ நெறியில் சித்தம் செல்லா நிலைமை யில் இருந்தனர்.

இந் நிலையில் மங்கையர்க்கரசியாராம் நம் குல தெய்வமாகிய நங்கையாரும் பாண்டி நாட்டின் தவப் பயனாய் அமைச்சுக் கடன்பூண்ட பெருநம்பி **குலச்சிறையாரும்** என்னும் இவ்விருவர் தம் பாங்கு மன்றிச் சைவம் அங்கு எய்தாதாயிற்று.

அவ்விருவரும் அரும்பெறல் தமிழ் நாடுற்ற தீங்கினுக்கு அளவு காண்பரிய பரிவு கொண்டவ ராகித் தாங்கள் சைவ ஒழுக்கத்தில் நின்ற தன் மையைப் பாண்டியன் அறியாத வகை கொண்டு செலுத்தினர். பாண்டியனும் பாண்டிநாடும் சமண இருளில் நின்று நீங்குவது எவ்வாறோ என்று கவலை கொண்டு ஏங்கி இருந்தனர்.

இவ்வாறு நிகழும் நாளில் வைதிக வாய்மைச் சைவச் செந்நெறி விளங்கவும், ஏழுலகு உய்யவும், புகலிப்பதியில் தோன்றிய புண்ணியப் பொருளா கிய **ஞானசம்பந்தப் பெருமான்** திருமறைக்காடு போந்து இருந்த செய்தியைக் கேள்விப்பட்டனர்.

> "கேட்ட அப்பொழுதே சிந்தை கிளர்ந்தெழு
> மகிழ்ச்சி பொங்க
> நாட்பொழு தலர்ந்த செந்தாமரை முகத்தராகி
> வாட்படை அமைச்சனாரும் மங்கையர்க் கரசியாரும்
> சேட்படு புலத்தாரேனும்
> சென்றடி பணிந்தா ரொத்தார்"

தாம் இருவரும் நேரில் சென்று பணிந்தது போலவே கருதித் தம் பொருட்டு ஞானசம்பந்தப் பெருமானை வணங்குவதற்காகப் பரிசனமாக்களை ஏவினர். அவர்கள் சென்று பிள்ளையார் கழல் வணங்கி அவர் கேட்க, மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் இருவரது நலங்களையும் கூறிப் பின் கன்னிநாடு அமணர்களால் கட்டழிந்ததும்,

மன்னனும் அவர்கள் மாயத்தில் அழுந்தியதும், ஆகிய செய்தியை அம்மையாரும், அமைச்சனும், புகலிவேந்தர்க்குச் சொல்லுமாறு தங்களை ஏவினரென வணங்கி விண்ணப்பித்தனர்.

அது கேட்டு ஆண்டிருந்த சிவனடியார் அனைவரும் நன்று நமையாளுடைய நாதன் பாதம் நண்ணுத எண்ணி, லமணர் தம்மை வென்றருளி, வேத நூல் நெறியேயாக்கி, வெண்ணீறு வேந்தனையுமிடுவித்து அங்கு நின்ற செயல் சிவனடியார் செயலேயாக நினைந்தருள வேண்டும் என நின்று போற்றினர்.

பின் ஞானசம்பந்தப் பெருமான் திருமறைக் காட்டினின்றும் புறப்பட்டு அடியார் குழாத்துடன் ஆலவாயை அண்மினர். இதனிடையே எண் பெருங் குன்றத் திருந்த எண்ணுயிரம் சமண முனிவர்களுக்கும் நிகழ்ந்த தீய நிமித்தங்களும், தீக் கனவுகளும் எண்ணில. சைவ நன்மரபில் வந்த "தடமயில் மடமென் சாயல் பாண்டிமாதேவியார்க்கும்", "மெய்வகை அமைச்சனர்க்கும்" நன்னிமித்தம் மேலும் மேலும் விளங்கின. நன்னிமித்தங்களின் பயன் உணர்ந்து அவரிருவரும் உளமகிழுங்காலை "உலகெலாம் உய்யவந்த வளரொலி ஞானமுண்டார்" மதுரையை வந்தணுகினரென்று சிலர் வந்து உவகை உரைத்தனர். அம்மொழி விளம்பினர்க்கு அளவற்ற வெகுமதிகள் அளித்து உண்மை அன்பு வெள்ளம் பொங்கித் தம்மையும் அறியா வண்ணம் தழைத்த பெருமகிழ்ச்சி மீக்கூர்ந்தனர். அப்போது அம்மையார் தம் திருவடி வணங்கி நின்ற அமைச்சரை நோக்கி "நாங்கள் தம்பிரானுராய ஞான போனகர் முன்பெய்தி இங்கு

எழுந்தருள உய்ந்தோம் என்று கூறி எதிர் கொள்ளும்'' என்ருர். அமைச்சனுரும் அடிவணங்கி இது வென்றிவேல் அரசனுக்கும் உறுதியே என்று ஞானசம்பந்தரை எதிர்கொள்ளச் சென்ருர்.

அது காலே அம்புய மலராள் போல்வாராம் அம்மையார் ஆலவாய் அமர்ந்தார்தம்மைக் கும்பிட வேண்டுமென்று அரசனுக்கும் அறிவித்துத் திருக்கோயில் சென்று இறைவனே வணங்கிப் பிள்ளேயாரின் நல்வரவை எதிர்நோக்கி நின்ருர்.

பிள்ளேயாரை எதிர்கொள்ளச் சென்ற பெருநம்பியார் நகரின் புறத்தே எய்திஞர். திருஞானசம் பந்தப் பெருமானும் தொண்டர் கூட்டத்தோடு "கன்னி நாட்டிடைக் கங்கை அணேந்தது போல் வர'' "பரசமய கோளரி வந்தனர்'' என்று சின்னம் பணிமாற எழும் ஓசை குலச்சிறையாரது செவி களில் அமுதெனத் தேக்கியது. குலச்சிறையாரும் தலேமேல் அஞ்சலி குவித்த கையினராய்த் தரை மேல் விழுந்து அளப்பரும் களிப்பின் மூழ்கிக் கிடந் தார். இது கண்ட அடியார் குழாம் ஞானசம்பந்தர் திருமுன்னிலேயில் சென்று உணர்த்த அப்பெருமானும் தமது முத்துச் சிவிகையினின்றும் இழிந்து விரைந்து சென்று வணங்கிக் கிடந்த மந்திரியாரின் செந்தாமரைக் கைகளேத் தம் பைங்கமலக் கையால் பற்றியெடுப்ப அவரும் எழுந்து வணங்கி நிற்ப, பிள்ளேயார் மதுர வாக்களிப்பவராயிஞர்.

செம்பியர் பெருமான் குலமகளார்க்கும் "திருந்திய சிந்தையீர்! உமக்கும் நம் பெருமான் தன் திருவருள் பெருகும். நன்மைதான் வாலிதே'' என்ருர்.

அது கேட்டு மந்திரியார் மண்மிசைத் தாழ்ந்து

அடி வணங்கித் தம் பெருந்தவத்தின் பயன் அனை யார்க்கும் தம் தன்மைநிலை உரைப்பாராயினர்.

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும்
இனி எதிர்காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்ற பேறிதனால்
எற்றைக்குந் திருவருளுடை யோம்
நன்றியில் நெறியில் அழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனும் உய்ந்து
வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும்
மேன்மையும் படைத்தனம்"

என்றார். தேவரீர்! இங்கு எழுந்தருளும் பெருமையை மங்கையர்க்கரசியாரும் கேட்டருளி, எய்துதற் கரிய பேறெய்தியவராய் நம்முடைய வாழ்வு எழுந் தருளியது என்று கூறித் தேவரீரை எதிர்கொள் ளும்படி என்னைப் பணித்தனர் என்று களிப்பொடு புகன்று போற்றினர். இருவரும் அளவளாவி வழி வரும்போது மதுரை எதிர் தோன்றவே, சம்பந்தப் பெருமான் "ஈங்கு நம்பெருமான் திருவாலவாய் மற் றெம் மருங்கினது?" என்று வினவினர். அமைச்ச னர் கோபுரத்தைச் சுட்டிக்காட்டி எம்பெருமான் இனிது அமர்ந்தருளும் திருவாலவாயிது என்றார். சம்பந்தப்பெருமான், திருவாலவாய்க் கோபுரத் தைக் கண்டு கரங் குவித்தருளி மண்டுபேரன்பால் மண்மிசைப் படிந்து,

"மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டி மாதேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநா யகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணிதன் னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவது மிதுவே"

என்று அம்மையார் அமைச்சனுர் இருவரது பணி யையும் இறைவன் கொண்டருளினமையைச் சிறப்பித்து நற்பதிகம் பாடினுர்.

பின்னர்ப் பிள்ளையார், திருவாலவாய்க் கோயிலை எய்தி இறைவனை வணங்கிப் பதிகங்கள் பாடிப் புகழ்ந்து, பரவித் திருமுன்றில் அணைந்தார். அவ்வேளையில் இறைவனைத் தொழும் விருப்பால் அங்கெய்திய அரசியார் பிள்ளையாரின் எதிர் செலாது, ஒரு மருங்கு ஒதுங்கிச் சென்று திருமுன்பு எய்தினுர். பிள்ளையார் மருங்கே நின்ற பெரு நம்பியார் அவரது கழல் வணங்கிக் "கருங்குழல் கற்றை மேற்குவிகைத் தளிருடையார் பருங்கையானைவாழ் வளவர் கோன் பாவையார்" என்று அம்மையாரை அறிமுகப்படுத்தவே, பிள்ளையார் பெருங் களிப்புடன் அம்மையார் எதிர் சென்ருர். தென்னவன் பெருந்தேவியார் சிவக்கன்றின் பொன்னடிக் கமலங்களில் விழுந்தார். வள்ளலார் இன்னருள் பெருஞ்சிறப் பொடும் திருக் கையால் எடுத்தார். ஞானபோனகர் எதிர்தொழுது எழுந்த மானியார், இந் நாள் வரை நம் உள்ளத்திலிருந்து உறுத்திய பெருங்குறை தீர்ந்தது எனக் கருதி மகிழ்ந்து "பானலங் கண்கள் நீர் மல்கப் பவளவாய் குழறி யானும் என்பதியும் செய்த தவமென்கொல்" என்ருர். கவுணியர் பிரானும் "சூழுமாகிய பரசமயத்திடைத் தொண்டு வாழும் நீர்மையீர் உமைக் காண வந்தனம்" என்ருர். மந்திரியார், பிள்ளையார், ஆண்டெழுந்தருளிய திறமெலாம் மொழியக் கேட்ட அம்மையார் பிள்ளையாரது திருவருள் பெற்றுத் தம் கோயில் சென்றடைந்தார்.

பின், குலச்சிறையார் திருமடங்காட்டப் பிள் ளையார் பரிசனங்களோடும் அங்கெய்தி இனிது அமர்ந்தார். ஞாயிறும் மேலைக் கடலை அணைந் தனன். இரவும் எய்தியது.

ஞானசம்பந்தப் பெருமான் அடியார் திருக்கூட் டத்துடன் வரக்கண்ட அமணர்கள் இருளுக்கோர் இருள்போல ஒருபக்கம் ஈண்டினர். திருத்தொண் டர்கள் திருமடத்தில் பாடிய திருப்பதிக இன் னிசை சமணர் காதைச் சுட்டன. அவை பொருராய் அவர்கள் அரசன்பால் சென்று ஞான சம்பந்தர் தம்மொடு வாதுசெய்ய வந்தார் எனவும், அவரைக் கண்டதினால் தமக்குக் கண்டுமுட்டு நேர்ந்தது எனவும் கூறினர். அது கேட்ட மன்னன் தமக்குக் கேட்டுமுட்டு நேர்ந்ததெனவுங் கூறிக் கவலை கொண்டிருந்தான். அவன் இசைவு பெற் றுச் சென்று பிள்ளையார் இருந்த திருமடத்தில், சமணர்கள் தீ இட்டனர். அத் தொழில் வெளிப் படவே, பரிசனங்கள் அத் தீயைச் சிதைத்து நீக்கிப் பின் பிள்ளையார் திருமுன் சென்று சமணர்கள் செய்த தீங்கினை விண்ணப்பித்தனர். அது கேட்ட பிள்ளையார் சமணர்கள் செய்த சதியால் அடியார்களுக்கு நேரிட இருந்த தீங்கினை எண்ணி அஞ்சி, பின், அவ்வச்சம் முனிவாக மாறி "இது அரசனது முறையின் வழு" எனக் கொண்டு சமண ரிட்ட இத்தழல் போய்ப் "பையவே சென்று பாண் டியர்க்காக" எனப் பணித்தார்.

பாண்டிமாதேவியாரது மங்கலநாணைப் பார்த் தும், குலச்சிறையாரது அன்பு காரணமாகவும், அரசன்பால் குற்றம் உள்ளதனாலும், அவன் மீண் டும் சிவநெறி அடையும் ஊழ் உளன் ஆதலானும்,

தம் கையால் தீண்டித் திருநீறு இடப் பெறும்பேறு டையன் ஆதலானும் தீப்பிணியைப் "பையவே செல்க" என்று அருளினர், புகலி வேந்தர். அத் தீப்பிணி வெப்பு நோயாய்ப் போய்ப் பாண்டி யனைப் பற்றிற்று.

இதனிடையில் ஞானசம்பந்தக் குழந்தையை அமணர் கூட்டம் மலிந்த இந்நகருக்கு யாம் அழைத்துள்ளோமே. சமணரால் அவர் திருமேனிக் குத் தீங்கு ஏதேனும் நிகழின் யாது செய்வதென அஞ்சி, அவ்வாறு ஏதேனும் நிகழின் நம் உயிரைத் துறப்போம் என முடிவு செய்திருந்த அம்மையா ரும் அமைச்சனரும் அமணர் செய்த தீங்கினையும் அது பயன்படா தொழிந்தமையும் அறிந்தும் இத னல் பின்னே யாது விளையுமோ என மயங்கி இருக்கும்பொழுது அரசனுக்கு வெம்மை நோய் விளைந்தமையை அறிந்து வருந்தினர்.

வெம்மை நோய் முதிர்ந்து எவ்வகை மந்திரங் களாலும் தீராது மாளிகைப்புறத்து நின்ருர்களும் புலர்ந்து திரிந்து போம்படி மன்னனை வெதுப்பி யது. மன்னனும் கருத்தழிந்து உரை மறந்தனன். அது கேட்ட சமணர்கள் அரசனை அடைந்து சூழ்ந்து அந்நோயின் காரணத்தை அறியாராய்த் தம் குண்டிகை நீரை அரசன்மேல் தெளித்து மயிற் பீலியால் "காவாய் அருகனே" என்று சொல் லித் தடவினர். அவர்களது குண்டிகை நீரும், மந் திரமும், யந்திரமும், பீலியும் எல்லாம் வெந்தனவே யன்றி யாதும் பயன்விளையவில்லை.

நோயின் காரணத்தை உணர்ந்த அம்மையா ரும் அமைச்சனரும் மன்னனைப் பணிந்து "ஞானசம் பந்தர் நம் நகர் அடையப் பொறுதவராகிச் சமணர்

கள் அவர்பாற் செய்த அநுசிதத்தால் விளைந்த இந் நோய் அப் பெருமானது திருவருளால் அன்றித் தீராது. காயமும் மனமும் மாசு கழுவுதல் இல்லாத இச் சமணர்கள் செய்கை யெல்லாம் இந்நோயை வளர்ப்பதே. ஞானமுண்ட பிள்ளையார் விரும்பி நோக்கின் தீய இப்பிணியே யன்றிப் பிறவியும் தீரும்'' என்றனர். இவ்வாறு இவர்கள் கூறவே, ஞானசம்பந்தர் என்னும் திருநாமமாகிய மந்திரம் பாண்டியனது செவியில் செல்லவே, அயர்வு தன்னைவிட்டகல, ஞானசம்பந்தரை அழைத்துவர இசைந்ததோடு, ''சமணரும், பிள்ளையாரும் என்ற இருவரில் இத்தீய நோயை நீக்கி வென்றவர் பக்கமே சேர்வேன் என்றும்,'' மொழிந்தான்.

உடனே அம்மையார் சிவிகையிலும் அமைச்சனார் பரிமேலும் சென்று ஞானத்தின் திருவுருவைக் கண்டு விண்ணப்பித்தனர். ''மன்னவன் திருமுன் சென்று அமணரை வென்றருளுவீரேல் உய்யும் எமதுயிரும் அவனுயிரும்'' என்று உரைத்தார்கள். பிள்ளையாரும், ''ஒன்றும் நீர் அஞ்சவேண்டாம்; 'உணர்விலா அமணர் தம்மை' இன்று நீர் உவகை எய்த யாவருங் காண வாதில் வென்று மீனவனை வெண்ணீறணிவிப்பல்,'' என்றருளிப் போந்தனர்.

அதுகாலை, அரசன் அருகில் இருந்த அமணர்கள், ''அரசே! நினது சமயத்தை நீ காக்க விரும்பினால் நோயை அவர்கள் தீர்ப்பினும். யாங்களே தீர்த்ததாகக் கூறவேண்டும்,'' என்று வேண்டினர். அரசன், ''இருதிறத்தீரும் நோயைத் தீருமின்! நான் பொய் பேச மாட்டேன்,'' என்றான். சமணர் தம் எண்ணங்கெட்டு வாடி இருந்தனர். அவ் வேளை

யில் தென் தமிழ்நாடு செய்த, செய்தவக் கொழுந்து போல்வார் ஆகிய அம்மையார் சிவிகையினின்று இறங்கிக் குலச்சிறையார் முன்செல்லப் பின்போந் தனர்.

ஞானசம்பந்தப் பெருமானும் "வானினின்று நிலத்திருள் நீங்கி வந்த கலைமதிபோலச்" சிவிகையி னின்றிறங்கி அரசன்பால் வந்தார். அரசன் கண் டான். கண்ட அப்பொழுதே வேந்தன் கையெடுத் துத் தன்முடியருகே ஆசனங் காட்டினன். பிள்ளை யாரும் வீற்றிருந்தனர்.

சமணர்கள் உள்ளே அச்சம் உடையவராய் இருந்தும் அதனை மறைத்துப் பொருமையினுல் வாதுக் கழைத்துப் பல பிதற்றித் துள்ளிக் குதித் தனர். அம்மையார் அது கண்டு பொருாகி உள் நடுங்கி அரசனை நோக்கி, "மன்ன! பிள்ளையார் திரு மேனி எளியர் போலும் இவர்கள் எண்ணிலார் உளர். முதலில் உன் நோயை எங்கள் வள்ளலார் தீர்ப்பர். பின்னர் வல்லரேல் அமணர்கள் வாது பேசட்டும்," என்றுர். அம்மையாரது அச்சத்தைக் கண்ட பிள்ளையார், அவரை நோக்கி,

> "மானி னேர்விழி மாதராய் வழுதிக்கு மாபெருந்
> தேவிகேள்
> பானல் வாயொரு பால னீங்கிவ னென்றுநீ
> பரிவெய் திடேல்
> ஆனைமாமலை யாதியாய விடங்களிற் பல அல்லல்சேர்
> ஈனர்கட் கெளியே னலேன்திரு வாலவாய்
> அரன் நிற்கவே"

என்று ஒரு பதிகம் அருளித் தேற்றினுர். பின் னர், திருநீறு பூசி மன்னனது நோயைப் போக் கினுர். பின் அனல் வாதும் புனல் வாதும் நிகழ்ந்

தன. அவற்றினும் சமணர்கள் தோற்றனர். புன லில் ஞானசம்பந்தர் இட்ட,

> "வாழ்க அந்தணர் வானவ ரானினம்
> வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
> ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
> சூழ்க வையகமும் துயர் தீர்கவே"

என்னும் திருப்பாசுரத்தில் "வேந்தனும் ஓங்குக" என்று கூறப் பெற்றதினுல் தென்னவன் உளக் கூனும், உடற் கூனும் நீங்கி நின்றசீர்நெடுமாற ஞயினுன். சமணர்கள் தம் சூளுறவுப்படி கழுவில் ஏறி மாய்ந்தனர். மாய்ந்தார் ஒழிய ஏனையோர் திருநீறு பெற்றுப் பூசிச் சைவராகி உய்ந்தனர். மன்னவன் நீறணிந்தான் என்று மற்றவன் மதுரை வாழ்வார் துன்னி நின்ருர்கள் எல்லாம் தூய நீற ணிந்து கொண்டார்.

> "மீனவற் குயிரை நல்கி மெய்ந்நெறி காட்டி மிக்க
> ஊனமாஞ் சமணை நீக்கி உலகெலாம் உய்யக் கொண்ட
> ஞான சம்பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
> தேனலர் கொன்றையார்தந் திருநெறி நடந்ததன்றே"

இவ்வாறு திருஞான சம்பந்தப் பெருமான் அருளால் சமண இருளை ஒட்டித் திருநீற் ருெளி பரப்பிய மங்கையர்க்கரசியாரும் அமைச்சனுரும் பாண்டியனுக்கு இரு கண்கள்போல் இருந்து அவ னுக்குத் துணைபுரிந்து பல்லாண்டு வாழ்ந்து பின் ஆடுகின்ற சேவடிக் கீழமர்ந்து இன்புற்றனர்.

# 4. சேக்கிழார்

திருஞான சம்பந்தர் தேவாரம்முதலாகப் பெரிய புராணமென்னும் திருத்தொண்டர் புராணம்ஈருகச் சைவத் திருமுறைகள் பன்னிரண்டாகும். அவற்றுள் பன்னிரண்டாவதாகிய பெரிய புராணம் 'பத்திச் சுவை நனி சொட்டும்' செந்தமிழ்ப் பாக்களால் இயன்றது. தமிழ்மணமும் சைவமணமும் ஒருங்கே கமழ்வது. பண்டைத் தமிழ் நாட்டின் சிறப்பைச் செவ்வன் எடுத்துக்காட்டுவது. சைவ சித்தாந்த நூற்கருத்துகளுக்குத் தக்க எடுத்துக்காட்டுக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சிற்றம்பலத்தெம்பெருமான் "உலகெலாம்" என எடுத்துக் கொடுத்த முதலை உடையது.

இத்தகைய அரும்பெறல் தெய்வத் திருமுறையைத் தமிழ் மொழி செய்த தவப் பயனாக உலகுக்கு வழங்கிய பெரியார் சேக்கிழார் என்ற சிறப்புப் பெயர் பெற்ற அருண்மொழித் தேவராவர். இப்பெரியார், "சான்றோர் உடைத்து" என ஔவையார் புகழ்ந்து கூறிய தொண்டை நன்னாட்டுப்புலியூர்க்கோட்டத்துக் குன்றவள நாட்டுக்குன்றத்தூரில் வேளாண்குலத்தில் சேக்கிழார் குடியில் தோன்றினர். அக்குடிக்கு அவர் ஒரு திலகம் என விளங்கியதால் குடியின் பெயராலே இவரைச் சேக்

கிழாரென்றே வழங்குவர். சிற்றிளம் பருவத்தி லேயே கல்வி, கேள்வி, அறிவு ஒழுக்கங்களிலே இவர் சிறந்து விளங்கியதால் இவரது புகழைச் சான்ருேர் பலர் கூறக்கேட்ட "சென்னி அபயன் குலோத்துங்க சோழன் தில்லைத் திருவெல்லை, பொன்னின் மயமாக்கிய வளவர் போரென்று" புகழப்பட்ட சோழமன்னன், தன் முதலமைச்சராக இவரை அமைத்துக்கொண்டான்.

அமைச்சு பூண்போர்க்கு நுண்ணிய இயற்கை அறிவும், திண்ணிய கல்வியறிவும், எண்ணிப் பேசும் சொல்வன்மையும், அரசன்பால் பேரன்பும், குடிகளிடத்து அருளும் இன்றியமையாதன. இவை யனைத்தும் ஒருங்கு வாய்க்கப் பெற்றிருந்தார் அருண்மொழித்தேவர்.

சமணகாப்பியமாகிய சீவகசிந்தாமணிச் சுவை யிலே அரசன் மூழ்கியிருப்பக் கண்டு அது தகுதி யன்றென எடுத்துரைத்தும்,அடியார் பெருமைகளை எடுத்துரைத்தும் அவனது வேண்டுகோளினுல் **திருத்தொண்டத்தொகையை** விரித்துத் **திருத் தொண்டர் புராணம்** இயற்றினுர். இந்நூல் சிதம் பரத்திலே தொடங்கி முடிவுபெற்று ஆண்டே அரங்கேற்றப் பெற்றது.

அங்கு இந்நூலைக் கேட்கவந்திருந்த அரசர்கள் மடாதிபதிகள், புலவர் பெருமக்கள், திருத்தொண் டர்கள் முதலிய பல்லாயிரக்கணக்கான மக்களுக் கும் அரங்கேற்றுதல் நடைபெற்ற ஓராண்டு முழுவ தும் வேண்டிய உணவு உறையுள் மருந்து முதலிய எல்லா வசதிகளையும் அநபாய அரசனே அளித் தான். அரங்கேற்ற முடிவில் புராணத்தையும் அதன் ஆசிரியரையும் யானைமேலிருத்தி நகர்வலம்

செய்வித்துப் பெருமைப்படுத்தினன். ஆசிரியருக்குத் தன்னிரு கரங்களாலும் கவரி வீசிச் சிறப்புச் செய்தான். அம் மன்னனது அன்பும் அருளும், சைவப்பற்றும், அடியார் பணியும் எத்துணையென யாம் கூற வல்லுநமோ?

சேக்கிழார் இயற்றிய நூலின் சுவைகளில் ஒரு சில ஈண்டுக் கூறுவோம். இந்நூலிலுள்ள பல் வகைச் சுவையினும் பத்திச் சுவையே ஏனைச்சுவை களினும் குறிப்பாகக் குறிக்கொள்ளத் தக்கது. ஆண்டானை அன் விகுதியாற் கூறினும்அடியாரை கூறுமிடந்தோறும் ஆர் விகுதி வைத்தே இளை யான்குடி மாறனர், மானக் கஞ்சாறனர் என்பன போலக் கூறியுள்ளார். இவர் கூறிய, திருக்கூட்ட அடியார்களின் இலக்கணம் என்றே கூறலாம்.

இயற்கைப் பொருள்களை வருணிக்கும்போதும் பத்தியின் பண்பையும் செயலையுமே உவமைகாட்டு வது இவர்பாலுள்ள தனிப் பண்பாகும். எடுத்துக் காட்டாகத் திருநாட்டுச் சிறப்பு,

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணிலபே ரறங்களும் வளர்க்கும் ஈகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது

வம்பு லாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன் வார்கரை எண்ணில் சிவாலயத்
தெம்பி ரானை இறைஞ்சலின் ஈர்ம்பொன்னி
உம்பர் நாயகர்க் கன்பரும் ஒக்குமால்

பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி னர்கள் தலையினல் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பம் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளங்கின சாலி யெல்லாம

என்னும் அருமைச் செய்யுட்களை நோக்குக.

சூரியன் மறைந்த பின்னர் இருள் வந்ததைப் பற்றி,

பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்பரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலோர்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்

என்றும் கூறியுள்ளார்.

சைவ சமயத்தில் அவர் கொண்டிருந்த பற்று சாக்கிய நாயனுர் புராணம் ஐந்தாம் செய்யுள், சண்டேஸ்வரர் புராணம் ஒன்பதாம் செய்யுள் முதலியவற்ருல் அறியலாம். முற்கூறிய செயல்களிலே சைவ சாதனங்களாகிய திருநீறு, திருவைந்தெழுத்து என்பவற்றின்மேற்கொண்டிருந்த பற்றும் புலனும். அடியார்களுக்குத் துன்பம் நேரிட்டதாகச் சொல்ல வேண்டிக் கட்டாயம் ஏற்பட்ட சில இடங்களிலும் படிப்போர் கேட்போர் மனமும் செவியும் வருந்தாவண்ணம் மங்கலமாகக் குறிப்பாகக் கூறிச் செல்வது இவர் இயல்பு. உதாரணமாக ஏனுதி நாயனுர் புராணத்தில்,

"முன்னின்ற பாதகனும் தன் கருத்தே
முற்றுவித்தான்"

என்பதாலும்,

மெய்ப்பொருள் நாயனுர் புராணத்தில்,

"பத்திரம் வாங்கித் தான்முன் நினைந்தஅப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப் பொருள்எனத் தொழுது
வென்ருர்"

என்பதாலும் அறியலாம்.

குலத்தானும், செய்துவந்த தொழிலானும், தொண்டானும் நின்ற அநுபவ நிலையானும், பல

வேறுவகைப்பட்ட அடியார்களின் வரலாறுகளைக் கூறும்பொழுது அவ்வந் நிலங் குலம் தொழில் தொண்டு நிலைமை முதலியவற்றைச் செவ்வனே அளவிட்டுக் கூறுவார். அடுத்துக்காட்டாக அந் தணராகிய திருஞான சம்பந்தர், வேளாளராகிய இளையான்குடி மாறர், வேடராகிய கண்ணப்பர், புலையராகிய திருநாளைப் போவார், செம்படவ ராகிய அதிபத்தர், வண்ணாராகிய திருக்குறிப்புத் தொண்டர் முதலிய நாயன்மார்களின் புராணங் களிலே காணலாம்.

இறைவனை வணங்குதல் முதலிய வேளைகளில் அன்பர்களுக்கு நிகழும் மெய்ப்பாடுகளை கற்போர் உள்ளவாறு நேரிற்கண்டதுபோல் எடுத்துக் காட் டும் திறன் இத் தெய்வப் புலவருக்கு அமைந்தது போல் வேறெவருக்கும் அமைந்திலது.
எடுத்துக்காட்டாக,

"ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்து சாத்து விகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடு மானந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்"

என்னும் அருமைச் செய்யுளை நோக்குக.

மெய், வாய், கண், மூக்கு, செவியெனும் ஐம் புலனும் வெவ்வேறு அறிவன. அவை இங்கே ஒன்றுபட்டன. கண் வழியே சென்றன. அந்தச் சமயத்தில் காது கேளாது, மூக்கு முகராது, வாய் சுவைக்காது, உடம்பு உணராது, அவ்வறிவு

அனைத்தும் இறைவன் திருவுவைக் காண்டலாகிய ஒருவழியின்கண்ணே சென்றன. மனம், புத்தி, சித்தம்,அகங்காரம் என்ற அந்தக்கரணங்கள் நான் கில் புத்தி முதலிய மூன்றும் ஆய்தல், துணிதல் முதலிய செய்கைகளில் ஒன்றும் நிகழாமல் தம் செயல்களெல்லாம் மனத்தின்கண்ணே தங்க இறைவனை நினைப்பது மாத்திரம் நிகழ்ந்தது. முக்குணங்களில் ஏனை இரண்டும் மறைய சத்துவகுணம் ஒன்றே தலையெடுத்து நின்றது. இந்நிலையில் நமது வன்றொண்டப் பெருந்தகையார் ஆனந்தக்கூத்தன் அருள்திரு பேரின்ப வெள்ளத்துள் திளைத்தார் என்பது இதன் பொருளாகும்.

“ஞானசம்பந்தர் என்னும் நாம மந்திரம்”, “அரசின் நாமம் ஏத்தி”,“நம்பி ஆரூர்நாமம் நவின்ற நலத் தாலே” என்று கூறியுள்ள பகுதிகளாலே அத் திருப் பெயர்களின் பெருமையும் அவற்றின் பால் இவருக்குள்ள ஈடுபாடும் புலனும்.

அகப்பொருள் பற்றிய நிகழ்ச்சிகளைக் கூறுமிடத்தும் கதா நாயகர்களின் பெருமைக்கும், தம்முடைய தகுதிக்கும் தாழ்வு வராத வகையில் சுவையும் குன்றுமல் கூறும் திறமையை என் என்பது ? எடுத்துக் காட்டாக,

“கற்பகத்தின்பூங் கொம்போ”, “முன்னேவந்து
எதிர் தோன்றும் முருகனோ”, “பேர் பரவை”

என்னும் அருமைப் பாடல்களைக் காண்க.

இவ்வரும் பெரும் நூலில் அமைந்துள்ள ஐந்திணை வளங்களின் அழகும் ஏனைய சொற்சுவை பொருட் சுவைகளையும் சுருங்கிய கட்டுரையில் எடுத்துக் கூற முடியாது.

திருஞான சம்பந்தர், அப்பர், நம்பி ஆரூரர் ஆகிய இவர்கள் தல யாத்திரைகளைப் பற்றிக் கூறிய இடங்களில் அவரவர் சென்ற வழி, மீண்ட வழி வழிகளிலே உள்ள ஊர்கள். அவற்றின் இயல்புகள், கால நிலைகள் முதலியவற்றைப் பற்றித் தெள்ளிதின் விளக்குவதால் அவ்வவ்விடங்களுக்கு இவ்வாசிரியர் நேரே சென்று ஊன்றிப் பார்த்து அறிந்தே கூறியிருக்கின்றார் என்றும் கூறலாம். முடியுடை மன்னனுக்கு முதலமைச்சராய் இருந்த தால் இவ் வசதிகள் வாய்ந்திருத்தலும் கூடும். மூவர்முதலிகள் இவ்வவ்வூர்களில் இவ்வெச் சமயங் களில் இவ்வெப் பாடல்களைப் பாடினார்களென்று அவ்வப் பாடல்களின் முதல் நினைப்பையும் சிலவற் றின் பண்புகளையும் தாளங்களையும் கூறுவதாலும், காரைக்காலம்மையார், பட்டினத்தடிகள், சேரமான் பெருமாள் முதலிய அருட் புலவர்களது பாடல் களின் சொல்லும் பொருளும் அங்கங்கே இவர் நூலில் மிளிர்வதாலும் தம் நூலுக்கு முந்திய பதி னொரு திருமுறைகளிலும் நன்கு பயின்றுள்ளார் என்பது புலனாகும்.

இந் நூலை அன்போடு ஊன்றிப் பயில்வோர் சிவபத்திச் செல்வராகி இறைவனருளை எய்துவ ரென்பது இந் நூல் தோன்றிய நாள் தொட்டு இன்று வரை பலரும் அநுபவத்தில் அறிந்த உண்மை.

இதனைப் பயில்வதால் சாதி, குலம், ஆண், பெண், செல்வர், ஏழை என்பதனால் வரும் உயர்வு, தாழ்வு பிணக்கம் நீங்கி மக்களாய்ப் பிறந்தார் அனைவரும் எக்குலத்திற் பிறப்பினும், எந் நிலையி லிருப்பினும் இறைவன் பால் அன்பு வைத்து

வாழ்ந்து அவனது திருவருளுக்கு உரியராதல் இயலும் என்ற பேருண்மையும் வெள்ளிடை மலைபோல் விளங்கும்.

இவ்வரும் பெரும் நூலைப் பல்காலும் கற்றுப் பயில்வதும், இதனை ஆக்கிய தெய்வப் பாக்கிழாராகிய சேக்கிழார் திருவடிகளைச் சிந்தனை செய்வதும் தமிழர், சைவர் என்பார் ஒவ்வொருவருக்கும் கடமையாகும்.

## 5. குமர குருபர அடிகளும் அவரது நூல்களும்

அமிழ்தினு மினிய தமிழ்மொழி, மூவேந்தரும், முச்சங்கமும்,வள்ளல்களும் மறைந்த பின்னர்த் தமிழகம் பிறமொழியாளரின் ஆட்சியிற்பட்டுப் பேணுவாரின்றிக் கிடந்த சமயத்தில், அதனைப் பேணிப் பாவேந்தரை ஆதரிக்க முன்வந்தவை சைவ மடாலயங்களாம். இடையே பல்லாண்டுகள் ஏனோ தானோ என்றிருந்த மடாலயத்தார் சில்லாண்டுகளாக மீண்டும் தமிழைப் பேண முன்வந்தமை தமிழகத்தின் நன்மைக்கு அறிகுறியாய் மகிழ்தற்குரிய செய்தியாகும். அத்தகைய மடாலயங்களில் ஒன்றை நிறுவுவதற்குக் காரணமாயிருந்த பெரியார் குமரகுருபரர்.

குமரகுருபரர் ஒரு நல்லிசைப் புலவர். சித்தாந்த ஞான அநுபூதி பெற்ற சீவன்முத்தர். மன்னர் வணங்கி வழங்கிய பெருநிதிக் குவியலால் தமிழும் சைவமும் தழைத்து வளர்வதற்கேற்ற வழிகண்ட வள்ளலார்.

சங்கப் பனுவல்களிற் புகழ்ந்து பேசப்படும் பொருநை (தாம்பிரபர்ணி)யாற்றின் வடகரையில் ஸ்ரீவைண்டம் என்னும் பதியின் வடபாலுள்ள கைலாசபுரம் என்னும் பதியில் வாழ்ந்த சைவ

வேளாளராகிய சண்முக சிகாமணிக் கவிராயரும் அவரது அரும்பெறற் கற்பின் மிக்க வாழ்க்கைத் துணைவியாரான சிவகாமியம்மையாரும் செய்த தவப் பேருகச் செந்திலாண்டவன் திருவருளால் நம் குமரகுருபரர் தோன்றினர்.

இவர் ஐந்தாண்டுவரை மூங்கையராய் இருந்தார். அது கண்டு பெற்ருேர் கவன்று, தம் மைந்தரைத் திருச்செந்தூருக்குக் கொண்டுசென்று செந்திலாண்டவன் திருமுன்னர்க் கிடத்தித் தாமும் பாடு கிடந்தனர். அப்பெருமான் அருளால் குழந்தையார் ஓதாதுணர்ந்த செந்நாப்புலவரானர். உடனே **கந்தர் கலிவெண்பா** என்ற அரிய பிரபந்தத்தைப் பாடினர்.

இறைவன் திருவருளாலும் பண்டைத் தவத்தின் பயனுலும் விரைவில் இலக்கண இலக்கியங்களையும் ஞான நூல்களையும் ஓதியும் உணர்ந்தார். அரும்புக்கு மணம் இயல்பில் அமைந்து உரிய காலத்து விரிந்து பரவுவது போலப் பத்தி ஞான வைராக்கியங்கள் இவர்பால் தோன்றி வளரலாயின. இவர் சிவதல யாத்திரையாகப் புறப்பட்டு மீனுட்சியம்மை திறத்துப் **பிள்ளைதமிழொன்று** பாடிவந்தனர். மீனுட்சியம்மையார் கனவில் எழுந்தருளிக் கட்டளையிட்டபடி திருமலை நாயக்கன் என்னும் வேந்தன், குமரகுருபரரைத் தக்க மரியாதையுடன் எதிர்கொண்டு வரவேற்றுத் திருக்கோயிலில் அந்தப் பிள்ளைத்தமிழை அரங்கேற்றுவித்தான்.

அதுகாலை அம்மை அருச்சகரின் பெண்மகவாகக் கோலங் கொண்டு அரசன் மடிமேல் வீற்றிருந்து பிரபந்தத்தைக் கேட்டருளினள் எனவும் முத்

தப் பருவம் அரங்கேற்றுகையில் தன் திருக்கழுத் திலிருந்த முத்த மாலையை இவருக்குப் புனைந்தருளி னள் எனவும் கூறுவர். மதுரையிலே பின்னும் சின் னுள் தங்கியிருந்து **மதுரைக் கலம்பகம்**பாடி அரங் கேற்றினர். மதுரையில் வாழுங்கால் மதுரை மன் னனுகிய திருமலை நாயக்கன் அரசியலலுவல்களின் மிகுதியால் நெடுநேரம் உணவின்றியிருந்தமை அறிந்த இவர் "வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி தொகுத்தார்க்கும் துய்த்தலரிது" என்ற குறளைக் கூறி, அதன் பொருளையும், விரித்துரைக் கக் கேட்ட மன்னன் திருக்குறளின் பெருமையை உணர்ந்து அதன் கருத்துக்களைச் சுருங்கிய நூலொன்றில் அமைத்துப் பாடித் தர வேண்டின ஞக **நீதிநெறி விளக்கம்** பாடியருளினுர். இவரது பெருமையை யுணர்ந்த மன்னன் இவருக்குக் கன காபிடேகம் செய்வித்தான்.

பின் இவர் திருவாரூருக்குச் சென்று தங்கி யிருந்த போது **திருவாரூர் நான்மணிமாலை** பாடி ஞர். சிவஞான உபதேசம் பெறவேண்டும் என்ற வேட்கை மீதூரலாயினர். ஞானதேசிகரை நாடலா யினர்.

இவ்வாறிருக்க, திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தில் நான்காம் பட்டத்திலே குரு மூர்த்தியாக விளங்கிய திரு. மாசிலாமணி தேசி கரை ஒருநாள் இவர் தரிசித்தார். தேசிகர் இவர் பால் அளவளாவி யிருக்கும்போது பெரிய புராணத் திலுள்ள "ஐந்து பேரறிவும்" என்ற திருப்பாட்டின் அநுபவப் பொருள் யாதென வினவ, திருவருட் செயலால் அதன் பொருள்கூற மாட்டாது, இவர் திகைத்துத் தம் மேலாடையை எடுத்து இடுப்பிற்

கட்டிக்கொண்டு, தேசிகரது திருவடியில் வீழ்ந்து தமக்கு அருள்புரியுமாறும், துறவுநிலை தரவும் வேண்டினர். ஆதீன மரபின்படி சிவதல யாத்திரை செய்து காசியைக் கண்டு அதன்கண் ஓராண்டு வாழ்ந்திருந்து வரும்படி தேசிகர் கட்டளையிட்டனர். காசிக்குச் சென்று வர நெடுங்காலம் செல்லுமே என்று இவர் கவன்றமை அறிந்த தேசிகர் சிதம்பரத்திலேனும் சிலகாலம் வாழ்ந்து வரும்படி பணித்தனர்.

ஞானாசிரியர் கட்டளைப்படி சிதம்பரத்துக்குச் செல்லுங்கால் இவர் வழியில் வைத்தீஸ்வரன் கோவிலைத் தரிசித்து ஆண்டெழுந்தருளியிருக்கும் **முத்துக் குமாரசாமிக்கு** ஒரு பிள்ளைத் தமிழ் பாடியருளினார். சிதம்பரம்சென்று கூத்தப் பெருமான் திருநடம் கும்பிட்டு அப்பகுதியிற் சிலகாலம் தங்கினார். அங்கே **சிதம்பரமும்மணிக்கோவை** இயற்றியருளினார். இவரது இளமையும் கவியியற்றும் திறமையின் பெருமையையும் கண்டு அழுக்காறுற்ற சிலர், இவர் வரகவிதானே, இலக்கணக் கவியல்லரே! எனக் குறிப்பாய் இகழ்ந்து கூறக்கேட்ட சிலரது வேண்டுகோளின்படி யாப்பிலக்கண அமைதியனைத்திற்கும் எடுத்துக்காட்டுக்கள் அமையச் **சிதம்பரச்செய்யுட்கோவையை** இயற்றியருளினார்.

இவர் மீண்டும் தருமபுரம் சென்று ஞானாசிரியர்பால் துறவுநிலை பெற்றுக் கல்லாடையுடுத்துக் காசிக்குப் புறப்பட்டுச் சென்றார். **சகலகலாவல்லி மாலை** பாடிக் கலைமகளின் கருணையால் இந்துஸ்தானி மொழியிலும் வல்லவராகி அம் மொழியின் வல்லமையால் டில்லி பாதுஷாவின் உள்ளத்தைக் கவர்ந்தார். பாதுஷா இவரது விருப்பிற்கிணங்கிக்

காசியில் இவர் இருப்பதற்குத் திருமடம் அமைக்கக் கேதார கட்டத்தில் இடம் கொடுத்தார். இவர் அங்கு வாழ்ந்து வருகையில் முகம்மதியர்களால் நெடுங் காலம் மறைக்கப்பட்டிருந்த விசுவலிங்கப் பெரு மானை வெளிப்படுத்திச் சைவாகம முறையில் நித் திய நைமித்திகங்கள் நடைபெற நிபந்தம் அமைத் தருளினுர். காசியில் இவர் வாழ்ந்த மடத்திற்குக் குமாரசாமி மடம் என்றுபெயர். காசியில் **துண்டி விநாயகர் பதிகமும், காகிக் கலம்பகமும்** பாடினுர். புராணசாலை ஒன்று அமைத்து அதன்கண் இந்துஸ் தானியிலும் தமிழிலும் புராணப் பிரசங்கங்கள் நிகழ்த்திஞர். சிறந்த இராம பத்தரும் இந்தியில் இராமாயணம் இயற்றியவரும் ஆகிய துளசீதாச ரும் இவரது பிரசங்கங்களைக் கேட்கும் பேறுபெற்ற தன்றிக் கம்பராமாயணக் கருத்துக்கள் பலவற் றைத் தாம் இயற்றிய இராமாயணத்தில் அமைத் துக் கொள்ளவும் பெற்ருர் என்பர்.

இவர் பாதூஷாவின் முன்னிலையில் சிங்கத்தின் மீதேறிச் சென்றதாகவும், முகம்மதியர் பலர் இவர் மேற்கொண்டிருந்த அழுக்காறும், பகைமையும் தீரும்படி பல அற்புதங்கள் நிகழ்த்தியதாகவும் கூறுவர்.

இவர் மீண்டும் ஒருமுறை தருமபுரம் வந்து ஞாஞசிரியரைத் தரிசித்துவிட்டு மீட்டும் காசிக்குச் சென்று வாழ்ந்து ஒரு வைகாசி மாதம் கிருஷ்ண பட்சத் திருதியையில் சிவபெருமான் திருவடி நிழ லடைந்தார்.

**இயற்றிய நூல்கள்**

இனி இவர் இயற்றியருளிய நூல்களைப்பற்றிச் சிறிது ஆராய்வோம். அடிகள் கந்தர்கலிவெண்பா,

இரண்டு பிள்ளைத்தமிழ்கள், இரண்டுகலம்பகங்கள், நான்மணி மாலை ஒன்று, நீதி நூலொன்று, மும் மணிக் கோவை இரண்டு, செய்யுட் கோவை ஒன்று, மாலை ஒன்று ஆகப் பதினொரு பிரபந்தங்கள் பாடி யுள்ளார். மீனாட்சியம்மை யிரட்டை மணி மாலை, மீனாட்சியம்மை குறம் தில்லைச்சிவகாமியம்மை யிரட்டை மணி மாலை என்பன, இவர் வாக்கல்ல என்பது சிலர் கருத்து. காசித் துண்டி விநாயகர் பதிகம் கிடைக்கவில்லை, விநாயகர்கொத்து என்ற பனுவற்றிரட்டிற் காணப்படும் துண்டி விநாயகர் பதிகம் அடிகள் இயற்றியதோ என்பது ஆராயற் பாற்று.

### தமிழன்பு

தமிழில் ஒரு சிறிது புலமை வாய்ப்பினும் தமி ழருக்குத் தமிழ்ப்பற்று மிகுதல் இயல்பே யென்றால் நல்லிசைப் புலவராகிய இவரது தமிழ்ப்பற்று இத் தகையதென எடுத்துரைக்க இயலுமோ! தமிழைக் கூறுமிட மெல்லாம் ஏதேனும் அடைகொடுத்தே கூறுவது இவரது இயல்பு. எடுத்துக் காட் டாக வண்டமிழ், தண்டமிழ், கொழி தமிழ், சங்கத் தமிழ், இசை முத்தமிழ், பசுந் தமிழ் என்பன காண்க. மீனாட்சியம்மையை "நறை பழுத்த துறைத் தீந்தமிழின் சுவையே" என வும், இறைவனைச் "சங்கம் பொங்கும் பண்முத் தமிழ்க்கோர் பயனே" எனவும் (மதுரைக்கலம்பகம்) அழைக்கின்றார்.

உலகம் முழுதும் ஈன்ற அம்மை தடாதகை யெனவும், தனி முதலாகிய இறைவன் சவுந்தர பாண்டியன் எனவும், முருகவேள் உக்கிரகுமார

னெனவும் மதுரையில் எழுந்தருளியிருந்து ஆண்டது தமிழின் சுவையைக் கொள்ளை கொண்டுண்ணவே என்றல் தமிழின் பெருமையை யாரறிவார்'' என்று பொருள்படும்படி, ''தமர நீர்ப் புவனம்...... யாரறிவார்'' என்ற பாடலிற் கூறியமை பாராட்டற்பாலது.

**நீதி நெறி விளக்கம்**

**நீதி நெறி விளக்கம் குறளின் சாரமானது**

நூறு செய்யுட்கள் உள்ள அந்நூலின் கடவுள் வாழ்த்துநீங்க, முதல்இருபத்தைந்துசெய்யுட்களிற் கல்வியைப் பற்றியே கூறியிருப்பதினின்றுஇவர்க்குக் கல்வியில் இருந்த ஆர்வம் புலனுகும். ''கல்வியே கற்புடைப் பெண்டிர்''என்ற செய்யுளால்,கல்வியே ஒருவர்க்கு மனைவி. இனிய கவித்துவமே செல்வப் புதல்வன் என்கிருர். இவை இருப்பினும் வாழ்க்கை சிறப்புடையதாவதற்குப் பாடங்கூறும் வன்மை, சொல் வன்மை என்ற செல்வங்களும் அமைதல் வேண்டும் என்று கூறியுள்ளமை எத்துணைப் பொருத்த மாகவும் அழகாகவும் உள்ளது.

ஈகையின் இலக்கணங் கூறுங்கால் ஈவாரைக் கற்பகமாகவும், அவரது கண்ணேக்கு அரும்பாகவும், நகை முகமே புது மலராகவும், இனியவாய் மொழியே இனிய காயாகவும் கூறியது பாராட்டற் பாலது. இத்தகைய பண்புடையாரே கற்பக தரு என்ற குறிப்பால், விண்ணுலகத்துள்ள கற்பகம் கற்பகமன்று எனவும் தோற்றும்.

வள்ளுவர் துறவற வியலிற் கூறிய பல திருக்குறள்களின் சாரமாக இவர், 'முற்றத் துறந்த ஒருவன் கற்றுவல்ல கணவன். மெய்யுணர்வு கற்

புடைய மனைவி; மெய்யுணர்விற்றோன்றும் 'இன்பமே மகன்; இம் மகனால் வரும் இன்பமே யொழிய மற்றவையெல்லாம் துன்பமே' என்று பொருள் படும்படி "கற்றுத் துறை போய" என்ற செய்யுளிற் கூறியுள்ளார்.

மனித வாழ்க்கையின் குறிக்கோளை இன்னதெனக் "கற்றுங் கறிந்து" என்ற பாடலிற் கூறுகிறார். 'கற்பன கற்று, அதன்படி அடங்கித் தீமை நீக்கி, நல்லன செய்து, போதும் என்ற மனம் உடையராய்ப் பற்றற்குரிய பரம்பொருளையே பற்றித் தற்போதம்* அற வாழ்பவரே அழியாத நெறியில் நிற்பவர்' என்பது அதன் கருத்து.

## சிதம்பரச் செய்யுட் கோவை

இவர் எவ்வகை யாப்பிலும் வல்லவர் என்பது, இவரது பல பிரபந்தங்களாலும் அறியலாம். சிதம்பரச் செய்யுட் கோவை சிறந்த சான்று.

## உளப்பாங்கு

இவர் திருமலை நாயக்கன் முதலிய மன்னரும் மதிக்கும் நிலையில் இருப்பினும் ஒன்றினும் பற்றற்ற உள்ளம் உள்ளவர். இதனைச் சிதம்பர மும்மணிக் கோவை எட்டாம் செய்யுளில், "எம்பெருமானே! எனக்கு வரம் ஒன்று ஈந்தருளல் வேண்டும். அதாவது: பெருங் குளிரால் வருந்தியபோது கந்தைத் துணியன்றி வேறொன்றும் கிடையாதாகுக; வறுமனையின் புறந்திண்ணையல்லது வேறு இடம் கிடையாதொழிக. பசிக்கு உப்பில்லாத கூழன்றிப்

---

* தற்போதம்—அகங்காரம் தற்போதம் முனையாதவாறு பரிகரித்தது.

புலம்பினுலும் வேறு கிடையா தொழிக; என்றும் ஒழுக்கம் நிறைந்தவரும் பெருங் கேள்வியாளரும் ஆகிய மாதவர் கூட்டத்தே நான் வைகுக. நின் திருவடியே யன்றி வேருெரு பதவியை நான்வேண் டினும் ஈயற்க" என்று வேண்டுதலால்'அறியலாம்.

**சைவ சித்தாந்த கருத்துக்கள்**

சைவ சித்தாந்தக் கருத்துக்களைத் தக்க உவமை உருவகம் முதலியற்றில் அமைத்துச் சொல் லுந்திறம் இவர்பாற் சிறந்து காணப்படு கிறது. **பண்டார மும்மணிக்கோவை,** 11-ஆம் செய்யுளில் மாசிலாமணி தேசிகரை உழவராகவும், மாயையை நாடாகவும் நால்வகைப் பிறவியை வாய்க்கால்களாகவும், எண்பத்து நான்கு இலட்சம் பிறவியின் பிரிவுகளை வயல்களாகவும் உயிர்களைப் பயிர்களாகவும், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம், ஆதி யாத்மிகம் என்பவற்றை முறையே, மும்மல மாகவும், போகங்களைப் புனலாகவும், ஐம்பொறி களை மடையாகவும் ஊழைப் பருவமாகவும், அத்து வாக்களை ஏரிகளாகவும், மூவகை வினைகளை விளை வாகவும் உருவகித்துக் கூறிய சதுரப் பாடு போற்றற் குரியது. இது வினைவிளைக்குந் திறம்.

இனி இத்திருப் பாட்டிலேயே அருள் விளைக் குந் திறங் கூறுகின்ருர்.அதில் சுத்த மாயை-வயல், அருள்-வித்து, கருணை-நீர், இவ்வயலில் வேதம்- மரம், அதிலே தோன்றும் கிளைகள்-சமயங்களும் அவற்றின் கதிகளும், மரத்தில் தோன்றும் இலை முதலியவை பயன். பலர் இலை முதலியவற்றைப் பயனுகக் கொண்டு மகிழ்ந்தனர். சிலரே அத்தரு வின் உச்சியாகிய வேதாந்தத்திற் பழுத்த ஆரு

இன்ப அருங்கனி பிழிந்த சாரமாகிய சைவசித்தாங் தம் அருந்தினர் என்கிருர்.

## அறிவொட்பம்

இவர் உலக இயல்பு முதலியவற்றை நன்ருக அறிந்தவர் என்பதற்குப் பல சான்றுகள், இவர் இயற்றிய குறம், கலம்பகம் என்னும் நூல்களிற் காணலாம். அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

இத்தகைய நல்லிசைப் புலவரும் சைவப் பெரி யாரும் தமிழ்வளர்த்த வள்ளலுமாகிய இவர் இயற் றிய நூலைப் பல்காலும் பயின்று பிறர்க்கும் எடுத் துரைத்து மகிழ்வது, தமிழர்க்கும் சைவர்க்கும் தலையாய கடனும்.

### அருஞ்சொற் பொருள்

ஆதி தைவிகம்—தெய்வத்தால் வருந்துன்பம்

ஆதி பௌதிகம்—பஞ்ச பூதங்களாலும் தன்னை ஒழிந்த பிராணிகளாலும் உண்டாகும் துன்பம்.

அத்துவா—வழி. மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணுத்துவா புவனுத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா.

சுத்தமாயை—துக்கமின்றிச் சுகமே அளிப்பதும், சுத்தப் பிர பஞ்சத்திற்கு முதற் காரணம் ஆனதுமான மாயை.

# 6. திருமுருகாற்றுப்படை

**நூலின் சிறப்பு:**

திருமுருகாற்றுப் படை சங்கத்துச் சான்றோர் செய்யுட்களிற் பத்துப்பாட்டில் முதலாவதாகும். சைவத்திருமுறைகளிலே பதினோராந் திருமுறையிலும் இது கோக்கப் பெற்றுள்ளது. முந்நூற்றுப் பதினேழு அடிகளுள்ள ஆசிரியப் பாவால் அமைந்தது. முருகப்பெருமானின் திருவருள் பெற விரும்பும் அன்பர்கள் அன்பொடு நாள்தோறும் ஓதிப் பயன்பெற உதவுவது. இதன் சிறப்பை ஆன்றோர் பலரும் புகழ்ந்துள்ளனர்.

"வளவாய்மை சொற்பிரபந்தமுளகீர னுக்குவந்துன்
மலர்வா யிலக்கணங்கள்—இயல்போதி
அடிமோனை சொற்கிலங்க
உலகா முவப்பவென்றுன்
அருளா லளித்துகந்த—பெரியோனே"

எனவும்,

"கீதவிசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரரிசை கேட்ட கருபை வேளே"

எனவும் அருணகிரி நாதரும்,

"பாவுள் முன்னுற
வந்துநிற்கும் முருகாற்றுப்படை"

எனத் துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளும்,

" தவிராத வெவ்வினை தவிர்க்கும் முருகாறு "

என அந்தகக் கவி வீரராகவ முதலியாரும் இதனைப் புகழ்ந்துள்ளமை காண்க.

**நூலின் வரலாறு:**

தருமியின்பொருட்டுச் சிவபெருமான் எழுதி ஈந்தருளிய "கொங்கு தேர்வாழ்க்கை என்ற பாடல் பொருட் குற்ற முடைத்து. மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணம் உளது என்று அப்பாட்டின்கண் குறித்தது பிழையாம்" என்று இறைவனோடு வாதாடிய காரணத்தால் "குட்டநோய், உறுக" எனச் சாபம் பெற்ற நக்கீரனார், அச்சாப நீக்கத்தின் பொருட்டுக் கயிலைக்குச் செல்லும் வழியில் ஒரு மலைக்குகையிலே முன்னமே அடைக்கப்பட்டிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரோடு சேர்த்துண்ணக் கருதித் தம்மையும் அடைத்துவைத்து நீராடச் சென்ற பூதத்தினின்றும் உய்யக் கருதி முருகக் கடவுளைக் குறித்துப் பாடியது இந்நூல் என்று கூறுவர். இவ்வரலாறு திருப்பரங்குன்றப் புராணம், திருவிளையாடற் புராணம், திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம் முதலிய நூல்களிற் கூறப்பட்டுள்ளது.

**பெயர்ப் பொருள்:**

திருமுருகாற்றுப்படை என்பதற்கு வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை, வீடுபெற்றானொருவன் முருகக் கடவுளிடத்தே ஆற்றுப்படுத்தது என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கூறியுள்ளார். ஆற்றுப்படை என்பது தமிழி

லுள்ள பலவகைப் பிரபந்தங்களில் ஒன்று. தொல் காப்பியப் புறத்திணையியலில்,

> 'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
> ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெருஅர்க் கறிவுறீஇச்
> சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்'

என்பது இதற்கு விதி.

நூற்பொருட் சுருக்கம்:

எல்லாச் சமயத்தாரும் புகழும் பருதியங் கடவுள் கடலிலே தோன்றினாற் போல மனம் ஒன்றி நினைப்பாருள்ளத்திலே அறியாமையாகிய இருள் கெடும்படி மலையின் மீது தோன்றும் பேரொளிப் பிழம்பு முருகப் பெருமான்; அவன் தன்னையடைந்தாரது அறியாமையை நீக்கும் திருவடியுடையவன்; அழித்தற்கு உரியாரை அழிக் கும் கையினன்; அறக் கற்புள்ள தெய்வயானை யம்மை மணாளன்; கடம்பு மாலை புரளும் மார்பினன்; சூரர மகளிர் விளையாடும் மலையிற்றோன்றிய சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் கண்ணி சூடிய முடி யினன்; அசுரர் வலியடங்கச் சூரபன்மாவாகிய மாய மாமரத்தைத் தடிந்த வேற்படையன்; அவனது ஞானமயமாகிய திருவடிப்பேற்றை விரும்பும் உள்ளத்தோடு நீ செல்ல விரும்புதியாயின் நீ தவறாமல் அதனைப் பெறுவை. அவன் தன்னை அடைந்தார்க்கு அருளும் பொருட்டு வீற்றிருக்கும் இடங்களைக் கேள். மாடமலி மறுகினையுடைய கூடல் நகரின் மேற்கேயுள்ள திருப்பரங்குன்றத் தில் விருப்புடன் அமர்ந்துளான்.

அதுவன்றி அவனுடைய ஆறு திருமுகங் களிலே ஒன்று உலகில் இருளை நீக்கவும், ஒன்று ஆர்வலர்க்கு அவர் விரும்பிய வரங்கொடுக்கவும், ஒன்று அந்தணர் புரியும் வேதவேள்விக்குத் தீங்கு வாராது நினைக்கவும், ஒன்று முனிவர்களுக்கு வேதாகமப் பொருளை அறிவுறுத்தவும், ஒன்று அசுரர் முதலியோரை அழித்துக் களவேள்வி செய்ய விரும்பவும், ஒன்று வள்ளி நாச்சியாரோடு மகிழ்ச்சியைப் பொருந்தவும், அம்முகங்களுக்கு ஏற்பப் பன்னிரு கைகளும் பலவகைத் தொழில் புரியவும் **திருச்சீரலைவாயிலிலும்** வீற்றிருக் கின்றான்.

அதுவுமன்றி மரவுரியுடையும், வானரை முடி யும், மாசறு வடிவும், வாடிய வுடலும், செற்றம் நீங்கிய மனமும், கற்றோரின் மேம்பட்ட அறிவும், சினமற்ற முனிவர்கள் முன்னே செல்லக் கந்தருவர் கள் இனிய யாழிசை பயிலக் கந்தருவ மகளிர் சூழத் திருமாலும், இந்திரனும், உருத்திரனும் தம் தம் தொழில் நிலைபெறவும், அயனைப் பழைய படைத்தற்றொழிலிலே நிலைநிறுத்தவும் விரும்பி முப்பத்து முக்கோடி தேவர் பதினெண் கணங் களுடன் வான் வழியாகத் தெய்வயானையம்மை யுடன் **திருவாவினன்குடி** என்னும் ஊரிலும் இருத்தற்குரியன்.

அதுவன்றித் தமக்குரிய அறுவகைத் தொழிலி லும் தவறாதவர்களும் நாற்பத்தெட்டி யாண்டு பிரமசரியம் காத்தவர்களும் முத்தீச் செல்வரு மாகிய அந்தணர்கள் ஈரம் புலராத உடையினராய் உச்சிமேற் கைகுவித்துத் துதித்து ஆறெழுத்து

மந்திரத்தைமெல்ல உச்சரித்து நறுமலரால் வழி படும் ஏரகம் என்னும் ஊரிலும் இருத்தல் உரியன்.

அதுவன்றி வெறியாட்டாளனுகிய வேலன் வெறியாடக் காட்டு மல்லிகையையும் வெண்டாளி யையும் பச்சிலைக் கொடியிலே கட்டின கண் ணியை யணிந்தவனுய்க் கள்ளின் தெளிவைக் கானவரோடு உண்டு தொண்டகப் பறை முழக் குக்கு ஏற்பக் குரவைக் கூத்தாடத் தன்னைச் சேவிக்கும் மடநடை மகளிருடன் வெட்சிமாலை யைச் சூடிப் பல இயங்களை எழுப்பிக் கோழிக் கொடியை உயர்த்திப் பாடும் மகளிருடனும் மெய் தீண்டி விளையாடற்குரிய மகளிருடனும் அவர் களுக்கு முதற்கை கொடுத்துக் குன்றுதோறும் விளையாடுதலையும் உரியன்.

அதுவுமன்றி ஊர்தோறும் எடுத்த விழாவின் கண்ணும், அன்பர் விரும்பும் இடங்களிலும், ஆற் றிடைக் குறையிலும் ஆறுகளிலும், குளங்களிலும், பல்வேறு ஊர்களிலும், சந்திகளிலும், கடம்ப மரத் திலும் கந்துடை நிலையிலும் மன்றத்து மரத்தின் கீழும், அம்பலத்திலும் மலைப்பக்கங்களில் குற மகளிர் வெறியாடு களங்களிலும் உறைதலு முரியன்.

முற்கூறிய இடங்களிலேனும், வேறு இடங் களிலேனும் நீ அவனைக் கண்ட பொழுது விரும் பித் துதித்துத் தலைமேற் கூப்பித் தொழுது "அறுவர் பயந்த ஆறமர் செல்வ!" என்பது முதலாகக் கூறித் துதித்து "நின் தன்மையெல்லாம் அளவிட்டறிதல் மன்னுயிர்க்கு அரிது. நின் திரு வடியைப் பெறவேண்டுமென்று நினைந்து வந் தேன்," என்று நீ கருதிய வீடுபேற்றினை விண்ண

பஞ் செய்வதற்கு முன்னமே அவனுடைய பரிசனங்கள் உன்னைப் பற்றி அன்பால், "பெரும! முதுவாயிரவலன் ஒருவன் நின்னைப் புகழ்ந்து வந்தான். அளிக்கத்தக்கான்," எனக் கூறுவர். அப்போது முருகன் ஆங்குத் தன் பெரிய தெய்வ வடிவத்தை உள்ளடக்கிக் கொண்டு தன்மணங் கமழ் தெய்வத்து இளநலங் காட்டி உன்னை "அஞ்சல்" எனக் கூறி நீ விரும்பிய வீடு பேற்றினை அளிப்பான். அருவிகள் ஆர்த்து இழியும் பழமுதிர் சோலையில் உள்ள முருகப் பெருமான் என்பது இந்நூலின் திரண்ட பொருளாகும்.

**சுவைத்து இன்புறத்தக்க பகுதிகள்**

இந்நூல் முழுவதும் சீரியகூரியசுவை கனிந்த பொருள் செறிந்த செஞ்சொற்களால் ஆகியது. இதன்கண் சிறப்பாகப் பாராட்டிப் படித்து இன்புற வேண்டிய சில பகுதிகளை மட்டும் ஈண்டுக் குறிக்கின்றேன்.

முருகப் பெருமான் மயில்மீது தோன்றுவதற்கு,

"உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு
ஓவற விமைக்கும் சேண்விளங் கவிரொளி"

என்ற உவமை மிக அழகியது.

சூரா மகளிர் ஆடை அணிகளும் அவர் விளையாட்டும் இன்பம் பயப்பன. பேய் மகள் வடிவமும், போர்க்களத்தில் அவள் தலையொன்றைக் கையிலேந்தி ஆடுதலும் அச்சம் பயக்கும். திருப்பரங்கிரியிற் சுனை, வண்டுகளின் இன்பவாழ்வு படிப்போர்க்கு இன்பந் தருவனவாகும். முருகப் பெருமா

னது திருமுகங்களாறும் திருக்கைகள் பன்னி ரண்டும் செய்யும் செயல்கள், அவனே உலக கார ணன்; அவனன்றி அணுவும் அசையாது என்ப தைப் புலப்படுத்தும். கந்தர் கலிவெண்பாவில் முரு கனது, திருமுகங்கள், கைகள் செய்யும் தொழில் களாகக் கூறப்பட்டுள்ளவற்றிற்கும் இதற்கும் வேறுபாடுகள் கண்டுணர்தல் வேண்டும்.

திருவாவினன்குடிப் பகுதியில் முனிவர்களது தூய தன்மை அழகாகக் கூறப்பட்டுள்ளது. முரு கப் பெருமான் மும்மூர்த்திகளாலும் வழிபடப் பெறும் முழு முதற் பொருள் என்பதும் இப் பகுதி யால் விளங்கும். திருவேரகத்தில் அந்தணர்கள் வழிபடும் முறை பயபக்தியைக் காட்டுகிறது. குன்றுதோருடலில் வேலன் வெறியாடும் முறை யும் மலேதோறும் இறைவன் விளையாடும் முறையும் இன்புற எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. பழ முதிர்சோலேப் பகுதியில் முருகன் வாழும்இடங்கள் பல கூறப்படுகின்றன. வெறியாடு களன் வர்ணிக் கப்படுகிறது. முருகனே முன்னிலேயாகப் புகழும் தொடர் மொழிகள் உள்ளத்தை ஊக்கத்தக்கவை.

பழமுதிர்சோலேயினின்று இழிதரும் அருவி வர்ணனே மிக அழகியது. இத்தகைய சிறந்த செந் தமிழ் அருட்பனுவலே அன்புடன் ஓதி ஆராய் வார்க்கு முருகன் எல்லா நலங்களேயும் எளிதில் அருளுவான்.

> "நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
> தற்கோல நாடோறுஞ் சாற்றினல்—முற்கோல
> மாமுருகன் வந்து மனக்கவலே தீர்த்தருளித்
> தாநினேந்த வெல்லாந் தரும்."

# 7. திருக்கயிலாய ஞானவுலா

உலா என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றுறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. அது உலாப்புறம் எனவும் வழங்கும். இது ஒரு தலைவன் தேர் முதலிய ஊர்திகளுள் ஒன்றில் ஏறி ஊரில் உலாவி வரக்கண்ட எழுவகைப் பருவத்துப் பொதுமகளிர் அவன்மேல் காதல்கொண்ட தன்மையை விரித்துக் கலிவெண்பாவால் கூறுவது.

"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப" (தொல். புறம். 30) என்ற சூத்திரவுரையில் இது புரைதீர் காமத்திற்கன்றிப் பக்குநின்ற காமத்திற்கு உரித்தென்றும், அக்காமம் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்குவதென்றும், ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுவர். இதன் இலக்கண விரிவு பன்னிரு பாட்டியலிலே பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

> "முதனிலை பின்னெழு நிலையுலா வெண்கலி"
> "பேதை முதலா எழுவகை மகளிர்கண்
> டோங்கிய வகைநிலைக் குரியான் ஒருவனைக்
> காதல்செய் தலின்வரும் கலிவெண் பாட்டே"

என்பன முதலிய சூத்திரங்களிற் காணலாம்.

கயிலாய ஞானவுலா என்பது திருக்கயிலையிற் பாடிய ஞானவுலா என்று பொருள்படும். இதனை ஆதியுலா எனவும் கூறுவர்.

**இதன் வரலாறு:**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேர நாட்டிலே திருவஞ்சைக் களத்திலிருந்து இறைவன் பணியால் அவன் விடுத்த வெள்ளானை மேலேறி விண் வழியாகத் தம் தோழராகிய சேரமான்பெருமாள் நாயனுரை நினைந்து கொண்டே சென்றுர். சேரமான்பெருமாள் தம் தோழரது செய்தியை அறிந்து உடனே ஒரு குதிரையின் காதில் திருவைந்தெழுத்தை உபதேசித்து அதன் மீதேறித் தாமும் விண்வழியே சென்று சுந்தரமூர்த்திகளை அணுகி அவருக்கு முன் சேவித்துச் சென்றுர். இருவரும் இறைவன் திருமுன் அடைந்தபொழுது, சேரமான் பெருமாள் இறைவன் அநுமதியின் பேரில் இத்திருவுலாவை விண்ணப்பித்து இறைவனை உவப்பித்தார். கயிலையில் அதனைக் கேட்ட மாசாத்தனுர் தரித்துத் திருப்பிடவூரில் வெளியிட்டனர் எனப் பெரியபுராணம் கூறும். சேரர் காவலர் இதனை ஆசு கவியாகப் பாடினுர் என்பது, "ஆதிஅந்த உலா ஆசுபாடிய சேரர்" என அருணகிரிநாதரும் அருளிச் செய்வதால் அறியலாம். உலாப் பிரபந்தங்களில் இதுவே காலத்தால் முந்தியது என்பது ஆதிஉலா என்ற இதன் பெயராலே உணரக் கிடக்கின்றது.

> **"ஆதியுலா வாலுருகும் ஆரு ரனைத்தமியேன்**
> **ஓதியுலா வாலுருக்க வுன்னினேன்—சோதிகையும்**
> **மாநாக மும்குழைக்கும் மாமேரு வெற்பையொரு**
> **பூநாக மும்குழைத்தல் போல்,"**

என அந்தகக்கவி வீரராகவ முதலியார் திருவாரூருலா அவையடக்கத்தில் கூறுவதால் ஆன்

றோர்கள் இதன்பால் வைத்திருந்த நன்மதிப்புப் புலனாகும்.

**நூலின் பொருட் சுருக்கம்:**

சிவபெருமான் சீரார் சிவபுரத்தில் ஏரார் திருக் கோயிலினுள் இருக்கையில் அமரர்கள் திருமுன் றில் அடைந்து "எங்களுக்குக் காட்சி யளித்தருள்" என்று வேண்டினார்கள். அவர்கள் வேண்டு கோளுக் கிரங்கிச் சிவபெருமான் கேசாதி பாதம் வரை உரிய அணிகலன்கள் அணிந்து திருமுன் றிலை அடைந்தான். முன்றிலிற் காத்திருந்த வசுக்கள் இருக்கு உரைத்தனர். எழு முனிவரும் வாழ்த்தினர். ஆதித்தர் பன்னிருவரும் பல்லாண்டு கூறினர். இன்னும் ஏனைய தேவர்களும் முனிவர் களும் தத்தம் தகுதிக்கேற்பப் பல பணிவிடை களைச் செய்ய அவர்களைக் கடைக்கணித்து, வெள் விடை மேலேறிப் பூதகணங்கள் காவல் செய்து சூழ்ந்து வர ஏழு திருவாயில்கள் கழிந்து வெளியே வந்தான். முருகன் மயிலிவர்ந்து முன்செல்ல இந் திரன் யானைமேற் பின்வரப் பிரமன் அன்னத்தின் மேல் வலப்பாலும் திருமால்கருடன் மேல் இடப் பாலும், இன்னும் தேவர் தலைவர்களும் ஏனையோர் களும் தத்தமக்குரிய நிலைகளில் தொடர்ந்து வந்த னர். பல்வகை இயங்கள் ஒலித்தன. இறைவன் உலாப் புறப்பட்டான். அனைவரும் பலவகையாகப் போற்றி யுரைத்தனர்.

சிவபெருமான் திருவீதியில் எழுந்தருளினான் என்பதைப் பறைமுழக்கத்தால் அறிந்தவுடனே பேதைமுதலாகப் பேரிளம் பெண்ஈறாக எழுவகைப் பருவத்துப் பொது மகளிரும் மகிழ்ந்து திரண்டு

மாளிகைகளிலுள்ள தூளிகையும் சூட்டும் முதலிய பலவேறு இடங்களில் ஏறி நின்று இறைவனைக் கண்ணாரக் கண்டு காமமீக்கொண்டு தத்தம் தகையிழந்து மயங்கினர்.

**பேதைப் பருவத்து பெண்ணொருத்தி** (5-7 வயது) மாளிகை வாயிலில் இருந்த பந்தலின் கீழே பாவையை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். அந்தப் பாவைக்கு அணிகலன், துகில் முதலியன அணிந்து அழகு நோக்கி அவள் மகிழும் போது "இதன் தந்தை யார்?" என்று ஒருத்தி கேட்ப, "ஈசன் எரியாடி" என்று அவளது தாய் சொன்னாள். அவ் வேளையில் சிவபெருமான் அங்கே பவனிவரக் கண்டு தொழுதாள்.

**பெதும்பைப் பருவத்துப் பெண்ணொருத்தி** (8-11 வயது) தோழியரும் தானுமாய்க் காமனுருவம் எழுதிக்கொண்டிருக்கும்போது சிவபெருமான் அவ் வீதியில் வந்தான். அவனைக் கண்டு அவள் தன் நாணும் நலனும் நிறையும் வளையும் தோற்றாள்.

**மங்கைப் பருவத்துப் பெண்ணொருத்தி** (12-13 வயது) பொற் கூட்டிலிருந்த பூவையைக் கைமேல் வைத்துச் சொற் பயிற்றிக் கொண்டிருக்கையிற் சிவபெருமான் வெள்ளி மலைமேல் ஞாயிறு போலத் தெரு வழியே வந்தான். அவள் அவன் தோளையும், தன் தோளையும், அவன் தாரையும் தன் தாரையும் நோக்கினாள். அவன் தோளின் மேல் நோக்கம் வைத்தாள். அவள் வேட்கையாம் வெள்ளத்திடை யழுந்தி வெய்துயிர்த்தாள்.

**மடந்தைப் பருவத்து மாது ஒருத்தி** (14-19 வயது) தன் தோழிகள் சூழத் தவிசேறியிருந்து

யாழைத் திருத்திச் சிவபெருமான்மேல் மடலும் வண்ணமும் பாடும்பொழுதில், அவன் ஏறிவந்த விடையின் மணியோசை கேட்டுத் திரும்பிப் பார்த் தாள். அவனைக் கண்டாள். வேட்கை கொண் டாள். தன் நிறத்தை இறைவனது கொன்றை மாலை கவர, அதன் பொன்னிறத்தைத் தான் கவர்ந்து புலம்பலுற்றாள்.

அரிவைப் பருவத்துப் பெண்ணொருத்தி (20-25 வயது) இன்னிசை வீணையைத் திருத்தி இறைவனைப் பாடத் தொடங்கும்போது, அவன் விடைமேல் தோன்றினான். கண்டாள். இன்னி சையும், இப்பிறப்பும், தமிழும், வீணையும் ஆகிய எல்லாவற்றையும் கைவிட்டாளாகி நங்கையவளும் நலம் தோற்றாள்.

தெரிவைப் பருவத்துச் சேயிழை ஒருத்தி (25-31 வயது) பொன்னாலாகிய கவறுகளையும் வெள்ளிப் பலகையையும் கொண்டு ஆயத்தோடு சூது பொரும்போது சிவபெருமான் அங்கே தோன் றுதலும் கண்டு நாண், நலம்,ஏண் (வலிமை), குலம் எல்லாம் தோற்றாள்.

பேரிளம் பெண் ஒருத்தி (32-40 வயது) பண் கவரும் சொல்லாள் பல்லாண்டு பாடவும் வெண் கவரி பலர் வீசவும் வீற்றிருந்தவள்.

> "கண்ணவனை யல்லது காணா செவியவன
> தெண்ணருஞ்சீ ரல்லா திசைகொள்ளா—அண்ணல்
> கழலடி யல்லது கைதொழா அஃதான்
> றழலங்கை கொண்டான்மாட் டன்பு."

என்று வெண்பாவொன்றை விரித்துச் சொல்லிக் கொண்டிருக்கும்போது, சிவபெருமான் மாட மறு கில் வரக் கண்டாள். உருகி மெய் வெளுத்து மால்

கொண்டாள். இவ்வாறு அவன் பவனிவந்த வீதி யிலே அவனைக் கண்ட பெண்டிருற்ற ஆரவாரம் மிகப் பெரியதாகும்படி பவனிவந்தான் என்பது நூலின் சுருக்கமான பொருள்.

**சுவைத்து இன்புறத் தக்க பகுதிகள்:**

பத்திச் சுவையும் இலக்கிய நலமும் பொலிந்து விளங்குவது இந்த உலாப் பிரபந்தம். இதனுள் பாட்டுடைத் தலைவனாகிய சிவபெருமானைச் சிறப் பித்துக் கூறும் சொற்றொடர்கள் பல கடவுளிலக் கணம் கவினுறக் காட்டுவன. துறவாதே யாக்கை துறந்தான்; ஆழாதே ஆழ்ந்தான்; ஊழலால் உய ராதே ஓங்கினான்; ஓதாதுணர்ந்தான் என்பன முரண்டொடை பொருந்த அமைந்தன. வினையின் நீங்கியவன். எங்கும் நிறைந்தவன், சுதந்தரமுடை யவன், விளங்கிய அறிவினன் என்பவை கடவு ளின் தன்மைகளைக் காட்டுகின்றன. "அரியாகிக் காப்பான்; அயனாய்ப் படைப்பான்; அரனாயழிப்பா னுந்தானே" என்பவை முத்தேவருமாயிருப்பவன் தானே என்பதை உணர்த்தும். எனினும் முத்தேவ ரினும் மேலானவன் என்பதைத் "தேவரறியாத தோற்றத்தான்" என்ற தொடர் தெரிவிக்கும்.

"எவ்வுருவில் யாரொருவர் உள்குவாருள்ளத் துள் அவ்வுருவாய்த் தோன்றி அருள் கொடுப் பான்" என்பது "ஆரொருவ ருள்குவார் உள்ளத் துள்ளே அவ்வுருவாய் நிற்கின்ற அருளும் தோற் றும் என்ற தமிழ்மறையையும்", "யாதொரு தெய் வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே மாதொரு பாகனாரே வருவர்" என்ற சித்தியார் செய்யுளையும் நினைவூட்டுகின்றது.

வானநீர் தாங்கி மறையோம்பிப் பிறையும் சூலமும் உடையவாய் வெள்ளை யணிதலால் மாடங்கள் சிவபெருமான்போல் வடிவுடையன என்று கூறியிருப்பது மிக அழகாக இருக்கிறது. இதுபோலும் உவமைகளும் உருவகங்களும் பல இடங்களில் இந்நூலில் வந்துள்ளன.

பேதைப் பெண்ணை வருணிக்கும்போது "நோக்கினும் நோய் நோக்கமாட்டாள்", "வாக்கும் பிறர் மனத்தை வஞ்சியாள்" என்பன போன்ற தொடர்கள் மிகச் சுவை பயப்பன. திருக்குறட் பாக்களை பல விடங்களில் வெகு பொருத்தமாக ஆசிரியர் ஆண்டிருக்கின்றார். இடைக்கு மேலும் கீழும் விலையுயர்ந்த ஆடையும் அணியும் அணிவித்து இயல்பாகவே மிடிபட்ட இடையை மேலும் மேலும் துன்புறுத்தினாள் ஒருத்தி என்று கூறவந்தவர் "இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு" என்ற திருக்குறளை எடுத்தாண்டுள்ளார். பேரிளம் பெண்ணைப் புனைந்துரைக்கும்போது "கண்டு கேட்டுண்டுயிர்த்து" என்னும் திருக்குறள் கருத்தையே மேம்படுத்தினாள் இவள் என்கிறார். தெரிவையை வர்ணிக்கும் பொழுது "மழலைவாய்ச் சொல்லின் குளிர்ச்சியால் புலரி யொப்பாள் ; வெப்பம் விளைத்தலால் உச்சி யொப்பாள்; சேவடியும் கையும் செம்மையால் அந்தி ஒப்பாள் என்பன முதலாகக் காலத்தின் வேறுபாடுகளை உவமையாகக் கூறியிருப்பது கவிநலம் நுகர்வார்க்குக் கழிபேருவகை தரும்.

பேரிளம் பெண் பாடியதாக நூலினிடையே " கண்ணவனை யல்லது " என்ற வெண்பாவொன்றை அமைத்திருக்கும் திறம் மிகப் பாராட்

டற் பாலது. “பலருக்குக் காட்சி கொடுத்த பின் ஈண்டு வந்தனையே இறைவா” என்று பிணங்குப வளாய பேரிளம் பெண் கூறும் கூற்ருக “வண் ணச் சிலம்படி மாதரார் தாமுண்ட கண்ணெச்சில் எம்மையே ஊட்டுவான் அண்ணலே வந்தாய்” என்பது அவனது காதல் மிகுதியையும் பெண் மைத் தன்மையையும் நன்கு காட்டுகின்றது. இன் னும் விரிப்பிற் பெருகும்.



# 8. கம்பன் கவிகளின் தனிப் பெருமை

அமிழ்தினுமினிய நம் தமிழ் மொழியில் சிறந்த இலக்கியங்கள் மிகப் பலவுள்ளன எனினும், அறிஞர்கள் பெரிதும் பாராட்டிப் போற்றும் உயர்ந்த நூல்களில் கம்பர் இராமாயணமும் ஒன்ருகும். கம்பர், திருவள்ளுவர் பெயர்களின் முதலெழுத்துக் களைக் கூட்டிக் குறிப்பிட்டுத் ''தமிழுக்குக் கதியாவார் இருவர்'' என வழங்கப் பெறுகின்றது. ஒருவர் இவ்வுலகை முற்றும் ஒரு குடைக்கீழ், தானே தனித்தாளும் உரிமை பெற்றிருப்பினும் அதனுடன் அமையாது வானுலகில் தேவர்கள் போற்ற இந்திரச் செல்வம் எய்திக் கற்பக நிழலில் வீற்றிருந்தாலும் அவர் பெறும் இன்பம்அனைத்தும் கம்பன் கவிகளில் ஒன்றின் கருத்தறிந்து, நயமுணர்ந்து அறிஞர் பெறும் இன்பத்திற்கு ஒரு சிறிதும் இணையாகா என்னுங் கருத்தால்,

'இம்பர் நாட்டிற் செல்வமெலாம் எய்தியரசாண்
டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கும் நீழலிருந்தாலும்
செம்பொன் மேருவனையபுயத் திறல்சேரி ராமன்திருக்
கதையிற்
கம்பநாடன் கவிதையிற் போற் கற்ருேரிதயங்களியாதே'

எனத் துணிந்து கூறுகின்ருர் ஒரு பெரியார்.

கம்பனை "அபிநவ கவிநாதன்" என்கின்றனர் மற்ருேர் அறிஞர். புதுமையினும் மிகப் புதுமையாகக் கவி புனையும் தலைவர் என்பது இதன் பொருள்.

இங்ஙனம் கற்று வல்ல பேரறிஞர்களில் கம்பரைப் போற்ருதாரும் இல்லை; புகழாதாரும் இலர். என்ன காரணம்? கம்பர் பெருமான் பிற கவிஞர்கள் மேற்கொண்ட வழிகளினும் உயர்ந்த புதுவழிகளைக் கொண்டும், சாமான்ய உவமைகளிலும் ஆழ்ந்த நுண்ணிய கருத்துக்களைப் புகுத்தியும் அவ்வச் சமயங்களில் கதாபாத்திரங்கள் உட்கொள்ளும் எண்ணங்களை உணர்ச்சிவேகம் பொங்க வெளிப்படுத்தும் முறையை ஊன்றியுணர்ந்தும், பற்பல நூல்களின் அரிய இனிய கருத்துக்களை மனத்திற் கொண்டு உலகியல்புக் கேற்பப் புதுக்கி மெருகிட்டும், தனக்கேயுரிய தனிப் பேரறிவினுல், சுவைமிக்க சொற்களையும், பொருட்களையும் கருதிக் கையாண்டும் தனது நூல் பிற்காலத்தாரால் உச்சிமேல் வைத்துப் போற்றப்பட வேண்டுமென்னும் அவாவால் மிக முயன்றும் இராமாயணத்தின் பெருமை மிக வேண்டியும் படைத்திருக்கின்ருர் என்று புலப்படுகின்றது. இவ்வெண்ணங்கள் அக்கவிஞரின் உள்ளத்தில் உலாவின என்பதற்கு அவர் வாக்குகளே சான்றுபகர்கின்றன. இராமாயணம் நகரப்படலத்தில் "செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளில் சீரியகூரியதீஞ்சொல் — வவ்விய கவிஞர்" எனத் தமிழ்க் கவிகளின் பெருமையை விளக்குமுகத்தால் பொருள்கள் மிகச் செப்பமாகவும், கற்போர்க்கு இனிமையும் பயனும் அளிக்கத் தக்கனவாகவும், அவற்றை உணர்த்தும் சொற்களும் பொறுக்கி எடுக்கப்பட்ட சிறப்பினவாயும்,

ஆழ்ந்து நுண்ணிய ஆற்றல் அமைந்தனவாயும் இருத்தல் வேண்டும். சிந்தித்துத் தேர்ந்து அவற்றைக் கவிஞர்கள் தமதாக்கிக் கொள்ளல்வேண்டும் என்று உணர்த்துகின்றார். கிட்கிந்தா காண்டம் பம்பைப் படலத்தும், ஆரண்ய காண்டத்துக் கோதாவரி யாற்று வருணனையிலும், கவிகள் ஆழ்ந்த பொருளவாயிருப்ப,உணர்த்துஞ்சொற்கள் அவற்றைத் தெளிய விளக்குவனவாக அமைதல் விசேடமெனக் குறிப்பிடுகின்றார். ஆகலின் இம்முறை பற்றி அமைக்கப்பெற்ற அவர் கவிகள் முற்றும் தனிப் பெருமைப் பெருஞ் சிறப்பினவாயிருத்தலில் வியப்பில்லை.

இனி அத்தகைப் பெருமிதக் கவிகளில் ஒன்றை விரிவாக வுரை வகுத்து அறிஞர்களின் உள்ளப் பொருட்காட்சிச் சாலையில் வைப்பேனாக.

இடம் : சுந்தர காண்டம் அசோக வனத்தில் பல அரக்கியர் குழாத்திடைச் சிறைப்படுத்தப் பட்டிருக்கும் சீதையை உடன்படுத்த இராவணன் ஒரு நாள் நள்ளிரவில் வருகின்றான். காவலரக்கியர் தூர அகல்கின்றனர். தனது காம மிகுதியைக் காதல் மொழிகளால் பாடவுரைத்துக் கெஞ்சி, இராவணன் கீழ் வீழ்ந்து வணங்கி இரக்கின்றான். அக்கொடியவனை நோக்கிச் சீதை பின்னால் அவனுக்கு நேரும் பெரும் கேடுகளை நினைத்து இரக்கமுற்றுச் சில அறிவுரைகளைக் கூறுகின்றாள்.

> "கடிக்கும்வல் லரவுங் கேட்கும் மந்திரம் களிக்கின்றாயை
> அடுக்குமீ தடாதென் றுன்ற ஏதுவோ டறிவுகாட்டி
> இடிக்குந ரில்லை யுள்ளா ரெண்ணிய தெண்ணியுன்னை
> முடிக்குந ரென்ற போது முடிவன்றி முடிவதுண்டோ ?"

இவ்வருமைக் கவியின் சுருங்கிய கருத்து:

மக்களைக் கடித்துக் கொல்லும் விட அரவமும் மந்திர சக்திக்குக் கட்டுப்படுவதைக் காண்கின்றோம். அரிய தவப் பயனும், ஆண்மையும் மூவுலகும் ஆளும் அரசும் பெற்ற காரணத்தால் நீ மிகவும் கருவம் கொண்டு களித்துத் தகாதவற்றைச் செய்யத் துணிகின்றனை. இச் சமயத்தில் உன் அமைச்சர்கள் குறுக்கிட்டு இவை இவை நல்லோர் செய்யத் தக்கவை, இன்னின்ன செய்யத் தகாதவை என உனக்கு எடுத்துக் காட்டி, இடித்துக்கூறி அறிவு புகட்டல் வேண்டும். அத்தகைய அமைச்சர்களை உன் தீய வினையால் பெற்றிலை போலும். அன்றியும் நீ கருதும் பாவச் செயல்களையும் ஆராயாமல் அவை முற்றும் சரியே எனக்கூறி உன்னை மேலும் மேலும் தீய வழிகளிற் செலுத்தி ஊக்குவிக்கும் துன்மதி அமைச்சரும் சூழ்ந்திருக்கின்றனர். ஆகவே நின் கருத்துச் சிறிதும் நிறைவேறாது. நீயே முடியப்போகின்றாய். உறுதி. நினைத்துப் பார். இத் தீயசெயலை அறவிடுத்து நல்வழிப்பட்டு உயிர்வாழ வகை தேடுவாயாக'' என்பதாம்.

இனி இக்கருத்துட் பொதிந்து விரிந்து விளங்கும் அரும்பெரும் பொருட்களையும் ஆய்ந்து காண்போம். சீதை கற்பின் மிக்க காரிகை. அவள் சாபாநுக்கிர வன்மையும் உடையவள். இதனை அவள் கூற்றாக வைத்து,

''அல்லன மாக்கள் இலங்கைய தாகுமோ
எல்லை நீத்த உலகங்கள் யாவுமென்
சொல்லி னாற்சுடு வேனது தூயவன்
வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்''

என அநுமனிடத்தில் வெளியிடுவிக்கின்றார் கம்பர்.

இத்தகைய வீரம் தனக்கிருந்தும், உடம்பை உயிரினின்றும் நீக்கிஞற்போலத் தன்னைத் தன் ஆருயிர்த் தலைவனிடமிருந்து வஞ்சத்தாற் பிரித்துக்கொண்டுவந்து சிறைப்படுத்தித் தன் உயிரினும் பன்மடங்கு உயர்ந்த கற்பை அழிக்கத் துணிந்து, கேட்கத் தகாத புன்மொழிகளைக் கூசாது பலநாள் புகன்று, இவ்வாறு கொலையினும் கேடான துன்பங்களைச் செய்துவரும் பெரும்பாவியை வெகுண்டு ஒரு சொல்லால் சபித்து அடியோடு தொலைக்க நினையாமல் பிற்காலத்தில் அவன் குடியோடு முற்றும் கெடப்போகும் நிலையை எண்ணிக் கருணை கூர்ந்து, பெரும் பொறுமை பூண்டு, "தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம் வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்"— என்பதற்கேற்ப மனங்கனிந்து இரக்கமுற்று நீதி உரைக்கத் தொடங்குகின்ருள். அவன் பெற்ற பெருமைச் செல்வம் காரணமாகக் கருவம் உண்டாவது இயல்பேஎனக்கருதுகின்ருள் என்பதை, 'களிக்கின்ருயை' என்னும் சொல்லால் பெறவைத்தார். இவனுக்கு நன்மதி கூறும் அமைச்சர்கள் இருந்து இடித்துரைத்தால் நல்வழிப்படுவான். அத்தகையோர் இல்லாமற் போயினர்! பாபம்! என்று கருதுகின்ருள். இதனுக்கு ஒரு சிறந்த உவமம் கொடிய பாம்பு கொள்ளப்பட்டது. இதனல் உவமை நயம் மிகப் பாராட்டுதற்குரியதாயிற்று. கொடிய பாம்பு மந்திரவாதி சொல்லும் மந்திரத்திற்குட்பட்டுக் கட்டுப்படுகின்றது. பாம்புக்குக் கேட்கும் உறுப்பாகிய செவியே இல்லை. இவனே செவிகளை விரித்துக் கொண்டுள்ளான். பாம்பு, தான் அறியாத ஒரு மொழியில் மந்திரத்தைக் கேட்கின்றது. இவனே

பல மொழிகளிலும் வல்ல பராங்கதன். அப்பாம்பு கேட்டற்குரிய அறியா மொழியின் மந்திரமும் அதனை உச்சரிப்பவனுடைய செவிக்கே கேட்கமுடியாத வாய் முணுமுணுப்பு. இவனுக்கோ அமைச்சர்கள் இடித்துக் கூறும் வல்லோசை. இங்ஙனம் காதே இல்லாத அஃறிணைப் பொருள், மொழியிலே தெரியாது, அதுவும் பிறர் செவிக்கும் அணுகாத உதடுகளின் அசைப்பு. இதனை உணர்ந்தும் பாம்பும் தன் செயலடங்கித் தம்பித்து நிற்கும்போது இருபது செவிகளும் வரிசையாகப் பெற்று வேதமாதி முழுநூர்லுணர்ந்து ;நவத்தான் முதிர்ந்த அறிஞருயிருக்கும் இவன் அமைச்சர்கள் அதட்டிக் கூறும் நல்லுரை கேட்டிருந்தால் திருந்தாதிரான் என்று துணிவு காட்டுதற்கு இதனினுஞ் சிறந்த உபமானம் ஏதுமில்லை என அறிந்து மகிழ்தற்குரியது.

மற்றும் திருவள்ளுவரின் அரிய குறளொன்றைப் பொன்னேபோற் போற்றி எடுத்து உரிய இடத்தில் ஒளிவிடப் பதிக்கின்றார்.

> "இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
> கெடுப்பா ரிலானும்கெடும்."

அரசனுக்குத் தீய எண்ணங்கள் உதிக்கும்போதெல்லாம் 'இது பாவச் செயல், ஒழிக' என இடித்துரைத் துணர்த்தும் அஞ்சா நெஞ்சுடைய அமைச்சர்களைப் பெறுவிடினும், கெடுக்கின்ற பகைவரில்லாவிடினும் அவ்வரசன் தானே கெடுவான் என்னும் கருத்தை உட்கொண்டு, "இராவணா! நினக்கு மதிபுகட்டும் மந்திரிகளில்லாமையால் யாரும் கெடுக்காமல் நீ தானாகவே கெடும் நிலையிலிருக்கின்றபோது உன்னைக் கெடுக்கின்ற துணை

வர்களாய் நின்று நீ செய்தது மிகமிக நன்றென்று உற்சாகமூட்டி வருவோரும் பலர் இருக்கின்றனர். இது பாழ்ங் கிணற்றில் விழப்போகின்றவனைப் புலியும் துரத்திப் பாய்வதுபோல உடனே கெட்டொழிவதற்கு வழியாயிற்று. ஆதலின் நீ குடியுடன் மாள்வது தவறுது. நின் தற்கால எண்ணம் நிறைவேருது. பெரியோனுய் நீடு வாழ வழி தேடுக'' என்று இவ்வாறு அறவுரை கூறுகின்ருள் அன்னை சீதாபிராட்டியார்.

> ''இன்ஞ செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
> என்ன பயத்ததோ சால்பு''
> ''இன்ஞ செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
> நன்னயம் செய்து விடல்''

தமக்குப் பலவகையில் தொல்லை, துன்பங்களைச் செய்துவரும் கயவர்களுக்கும் கருணை கூர்ந்து நன்மையே செய்யாவிடில் பெருந்தன்மைக்கு வேறு சிறப்பு என்னுள்ளது? நமக்குத் துன்பஞ் செய்தோரைத் தண்டிக்க வேண்டுமாயின் அத்தண்டனையாவது அவர் மிகவும் வெட்கித் தலைகுனிந்து தம்மைப் பாவிகளென்றும், நம்மைப் புண்ணிய மூர்த்திகளென்றும் மனமாரக் கருதத்தக்க வகையில் பெரிய உபகாரங்களை அவர்கட்குச் செய்து இவ்வாறு நாம் அரிய செயலைச் செய்தோம் என்று எண்ணும் எண்ணத்தையும் மனங்கொள்ளாது மறத்தல் வேண்டும் என்னும் கருத்தடங்கிய திருக்குறட் பகுதிகளையும் இவ்வொரு செய்யுள் நினைவு கூர்தலுங் காண்க.

## 9. சங்கச் செய்யுளின் பெருமை

எந்நாட்டு மக்களும் தம் முன்னோரின் பெருமையை உணர்ந்து கொள்வதில் ஆர்வம் உடையராய் இருத்தல் இயல்பே. தமிழராகிய நாம் நம் மூதாதையரின் சிறப்பை உணர்வதற்குச் சங்க நூல்கள் சிறந்த கருவியாக அமைந்துள்ளன. சங்க நூல்களாவன: **பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண்கீழ்க் கணக்கு** என்பன. இவை சங்க காலமாகிய கி. பி. இரண்டாம் நூற்றாண்டிலும் அதற்கு முன்பும் வாழ்ந்திருந்த நல்லிசைப் புலவர்கள் பாடிய செய்யுட்களின் தொகையாகும்.

சங்கச் செய்யுள் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் அருளிச் செய்த தொல்காப்பியம் என்னும் தெள்ளறிவுக் கருவூலத்தை—அரும்பெறல் இலக்கண நூலைத் தமக்கு இலக்கணமாகக் கொண்டவை. தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பேசப்படும் பொருள் அகம், புறம் என்னும் இரு பகுதி உடையது. மக்கள் எய்துதற்குரிய உறுதிப் பொருளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கும் அகம், புறம் என்னும் இரு பொருட் பகுதியில் அடங்கும். அகம் என்பது இன்பம். புறம் என்பது அறம், பொருள், வீடு என்னும் முப்பகுதியை உடையது. எனவே இவ்விரு

வகைப் பொருளையும் பற்றி எழுந்த செய்யுட்கள் உறுதிப் பயன் நான்கையும் கூறுவனவாம்.

சங்கச் செய்யுட்களைப் பயில்வோர் அறம், பொருள், இன்பம், வீடு என்பனவற்றைப்பற்றி நம் முன்னோர் கொண்டிருந்த கருத்துக்களைச் செவ்விதின் உணரலாம். அவர்கள் எவ்வாறு தம் வாழ்க்கையை நடத்தினரென்று உணரலாம். பல திறப்பட்ட மக்கள் வாழ்க்கையை அறியலாம். இன்றைய நம்வாழ்க்கையினும் நம் முன்னோரின் வாழ்க்கை சிறந்ததாகத் தோன்றுமேல் அவ்வுயர் நிலையை மீண்டும் அடைதற்குரிய முயற்சி செய்வோம். தாழ்ந்திருந்ததாகத் தோன்றுமேல் அத்தாழ்வு மீண்டும் அணுகாமல் தடுப்போம்.

**நாட்டுப் பற்று**

சில நூற்றுண்டுகளாக அடிமைத் தளைப் பட்டுக் கிடந்து அண்மையில் உரிமை பெற்ற நமக்கு நாட்டுப்பற்றே முதற் கடமையாகத் தோன்றுதல் இயல்பு. சங்க காலத்துத் தமிழரின் நாட்டுப் பற்றினை நோக்குவோம். **பூதப்பாண்டியன்** என்னும் வேந்தன் கூறிய வஞ்சினத்தில், "என்னுடன் பொருவேம் என்னும் வேந்தர்களை நான் வென்று காணேன் ஆகில் இன்னின்ன தீமைகளைச் செய்தேன் ஆகுக"—என்று கூறியதன்றி "மன்பதை காக்கும் நீள் குடிச் சிறந்த தென்புலங் காவலின் ஒரீஇப் பிறர், வன்புலங் காவலின் மாறி யான் பிறக்கே" (புறம்-71). அதாவது பல்லுயிரையுங் காக்கும் அரசர் குலத்தில் பிறந்து சிறந்த பாண்டி நாடு காக்கும் காவலின் நீங்கி, பிறருடைய வன்புலங்களைக் காக்கும் காவற்கண்ணே

இக்குடிப்பிறப்பின் நீங்கி யான் பிறப்பேஞகுக'' என்றது காண்க. இவ்வேந்தன் கூற்ருல் அவனுக்கு மீண்டும் பிறப்பு உளதேல் பாண்டி நாட்டிலே பாண்டியர் குடியிலே பிறக்க அவன் விரும்புவதை அறிகின்ருேம். என்னே! அவனது நாட்டின் பற்று. ஒருவனது நாட்டை இழித்துக் கூறின், அது அவனையே இழித்துக் கூறியதாகும் எனப் பண்டையோர் கருதினர் என்பது "நகுதக்கனரே நாடுமீக்கூறுநர்'' என்ற பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் பாடலால் அறியலாம்.

### அரசன் பால் அன்பு

பண்டைத் தமிழரசர் தம் குடிகளைக் கண்ணும் கருத்துமாய்க் காத்துவந்தனர். குறைவேண்டு வார்க்கும் முறைவேண்டுவார்க்கும் செவ்வி எளிய ராய் இருந்தனர். கோல் கோடாது இறை முறை புரிந்தனர் என்பதற்கு எண்ணிறந்த சான்றுகள் சங்க நூல்களில் உள்ளன. இறைமாட்சி, செங் கோன்மை முதலிய திருக்குறள் அதிகாரங்களே சான்று. அதுவன்றி,

> "அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
> திறனில் ஒருவனை நாட்டி முறைசெய்து
> மெலிகோல் செய்தேன் ஆகுக,"

எனப் பூதப்பாண்டியனும்,

> "என்நிழல் வாழ்நர் சென்னிழல் காணுது
> கொடியன் எம்இறையெனக் கண்ணீர் பரப்பிக்
> குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக,"

எனப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனும் கூறினமை காண்க.

"காவல் குழவி கொள்பவரின் ஓம்புமதி" (குழந்தையைப் போற்றும் தாய்போல நாடு காவலைப் பேணுக) என்று அரசர்க்கு அவ்வப் போது சான்றோரும் அறிவுறுத்தினர்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் எவ்வாறு தன் நாட்டினைக் காவல் செய்தான் என்பதை இடைக்காடனார் கூறுவது காண்க.

"தண்புனற் பூச லல்லது நொந்து
களைக வாழி வளவ என்றுநின்
முனைதரு பூசல் கனவினு மறியாது
புலிபுறங் காக்குங் குருளை போல
மெலிவில் செங்கோல் நீபுறங் காப்பப்
பெருவிறல் யாணர்த் தாகி" (புறம் - 42)

(குளிர்ந்த நீர், கரையை மோதும் புனலது ஆரவாரமன்றிப் போர் என்ற பூசலை உன் நாட்டில் வாழ்வோர் கனவிலும் அறியார். குருளைகளைக் காக்கும் புலிபோல நீ காக்கின்றனை என்று புகழ்கின்றார்). அதனால் குடிமக்களுக்கு,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"

என்றனர் சான்றோர். செங்கோல் கோடிய போதும், குடிகளைக் காக்கத் தவறிய போதும், அரசர் தம் உயிரையும் நீத்தனர் என்பதற்கு ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனே தக்க சான்றாவான். பொற்கைப் பாண்டியன் வரலாறும் செங்கோன்மைக்குத் தக்க சான்றாகும்.

**அரசரும் கல்வியும்**

தமிழரசர் தாமே சிறந்த கல்வியாளராய் இருந்தனர். அதனாலன்றோ திருக்குறளில் கல்வியைப் பற்றிய அதிகாரங்கள் அரசியலில் அமைந்துள்ளன. பாண்டியரிற் சங்கம் ஏறினூர் பலர் என இறையனூர் களவியலில் காண்கின்றோம். மூவேந்தர் குடிப்பிறந்தோர் பலர் பாடிய பாட்டுக்கள் தொகை நூல்களிற் காணப்படுகின்றன. பாண்டியரில் பூதப்பாண்டியன், தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முதலியோரும், சோழரில் கிள்ளிவளவன், நலங்கிள்ளி, நல்லுருத்திரன் முதலியோரும், சேரரில் சேரமான் கணைக்காலிரும்பொறை, மாக்கோதை, பாலை பாடிய கடுங்கோ முதலிய நல்லிசைப் புலவராய மன்னருமாக எத்தனைபேர்? "உற்றுழி உதவியும்" என்ற நெடுஞ்செழியன் பாட்டினால் கல்வியின் மேல் அவன் வைத்திருந்த பெரும் பற்றும் கற்றோரைக் குலம், வயது முதலியவற்றின் குறைவு கருதாது பெருமைப் படுத்தல் அரசர் கடமை என்ற அவன் கருத்தும் உணரலாமன்றோ?

கற்றோர்க்கு அரசர் வழங்கிய வரிசைகள் எத்தனை? சிறப்பாகப் பதிற்றுப்பத்தில் சேரர்களைப் பாடிய புலவர்கள் பெற்ற பரிசுகள் எத்தகையன? நாடு கொடுத்தனர்; பொன் கொடுத்தனர்; தம் புதல்வரையும் புலவர்களுக்குக் குற்றவேல் செய்ய விடுத்தனர். முரசு கட்டில் ஏறிப் படுத்துறங்கிய புலவனைக் கொல்லாமல் தன் கையாற் கவரி வீசிய மன்னனும் உளனன்றோ? பாலை பாடிய உருத்திரங் கண்ணனூர்க்குக்

கரிகால் வளவன் பதினாறு நூறாயிரம் பொன் பரிசில் கொடுத்தான் என்று கலிங்கத்துப் பரணியில்,

"தத்து நீர்வரால் குருமி வென்றதும்
தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப்
பண்டு பட்டினப் பாலை கொண்டதும்"

என்று சயங்கொண்டார் கூறுதல் காண்க.

கோவூர்கிழார், நரிவெரூஉத்தலையார், கபிலர், பரணர், அரிசில்கிழார் முதலிய புலவர்கள் அவ்வப்போது அரசர்களை இடித்துரைத்த நல்லறிவுரைகளை, அரசர்கள் நன்கு மதித்து ஏற்றுத் திருந்தி வாழ்ந்தமை பலரும் அறிந்ததே.

## குடி இயல்பு

அரசர்கள் அறநெறி ஒழுகும் குடிகளையே தம் செல்வமாகக் கருதினர். குடிகள் ஒழுக்கந் தவறாமல் வாழ்வதற்குப் பசிப்பிணியின்றி இன்புற வாழ்தலே இன்றியமையாதது என அரசர் உணர்ந்திருந்தனர். அதனால் நாட்டின் நீர் நிலைகளை ஒழுங்குபடுத்தி, விளைவை மிகச் செய்து பசிப்பிணியை அறவே போக்கினர். புலவர்களும் அவ்வப்போது அக்கடமையை மன்னருக்கு நினைவூட்டி வந்தனர்.

பாண்டியன் நெடுஞ்செழியனைக் குடபுலவியனார் பாடிய பாட்டில் (புறம்-18) "அரசே! மறுமையுலகத்துச் செல்வத்தை நீ விரும்பினும், பகைவரை வென்று மேம்பட விரும்பினும் நான் சொல்வதை விரும்பிக் கேள். உடம்பிற்கெல்லாம் உணவு கொடுத்தவர்கள் உயிர் கொடுத்தவராவர்.

உணவை முதலாக உடைத்து அவ்வுணவினுலா கிய உடம்பு என்பன போன்ற கருத்துக்களைக் கூறி நீர்நிலைகளை அமைக்கும்படி கூறுவது காண்க. அரசர்கள் நீர்நிலைகளை அமைப்பதில் கருத்துச் செலுத்தி வந்தமைக்குக் கரிகாலன் காவிரிக்குக் கரை கட்டியதே தக்க சான்ருகும். அவர்களது நாடும் "களிறு மாய்க்கும் கதிர்க் கழனி"யன வாயின. வேலி ஆயிரம் விளையுட்டாக நிலம் விளைந்தது.

குடிமக்கள் மன மகிழ்ச்சியோடு தம் அரசர்க்கு இறைப் பொருள் கொடுத்து வந்தனர். விளைவு முதலிய குன்றிய காலையில் அரசர் குடிகளை வருத்தி வரிவாங்குதல் இலர். "காய் நெல் அறுத்துக் கவளங் கொளினே" என்ற பிசிராந்தையார் பாடலில் அரசன் அன்புகெட வரி வாங்கினுல் நாடு கெடும் என்றும், நெறி அறிந்து இறை கொள்ளின் நாடு கோடிபல நந்தும் என்றும் பாண்டியன் அறிவுடை நம்பிக்கு அறிவு உறுத்தல் காணலாம். வணிகரும் கொள்ளை இலாபம் அடிக்கும் கொடுமதி இல்லாமலும், நிறைய வாங்கிக் குறையக் கொடுக்கும் குற்றமில்லாமலும், "கொள்வதூஉம் மிகைபடாது, கொடுப்பதூஉங் குறைபடாது" வாணிபம் செய்தனர். நெடு நுகத்துப் பகல்போல வாழ்ந்தனர்.

### தெய்வக் கொள்கை

குடிகளும் அரசரும் இவ்வாறு முறை தவருமல் வாழ்தற்குச் சிறந்த காரணம் கல்வி, அறிவுடைமை முதலியனவாம். இவ்வேதுக்களால் மக்கள் நல்ல தன் நலனும் தீயதன் தீமையும் உண்டுஎன உணர்ந்தனர். இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம் என்ற

உணர்ச்சி இருந்தது. வினைப்பயனின் நம்பிக்கை இருந்தது. வினைப்பயனை ஊட்டும் தெய்வத்தினிடத்தும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

சங்க நூல்களில ஆலமர் செல்வன், நெடுவேள், மாயோன், பலராமன், இந்திரன், சாத்தன் முதலிய கடவுளின் செய்திகள் பல காணப்படுகின்றன. சிவபெருமானையே பிறப்பு இறப்பு இல்லா முழு முதற்கடவுள் எனப் பேணினர் என்பது தெரிகின்றது. **"பிறவாயாக்கைப் பெரியோன்"**, "இறைவன் என்பன போன்ற சொற்றொடர்கள் பல காண லாம். "நல்லவும் தீயவுமல்ல" என்ற கபிலர் பாடலினுல் புல்லிய இலையை உடைய எருக்கம் பூவாயினும் கடவுள் வேண்டாம் என்னுது என்று உணர்கிறேம். இதனுற்போலும் "நாறும் பூவும் தேவர்க்காம், நாருப் பூவும் தேவர்க்காம்" என்ற பழமொழியும் எழுந்தது. எருக்கும், பூவும், பேணி அணிபவன் சிவப்பெருமானே. சிவ வழிபாடே சங்க காலத்தில் சிறந்து இருந்தது.

கடவுளர்க்கும் அவரது படைகளுக்கும், ஊர்திகளுக்கும் கோயில்கள் அமைந்திருந்தன. வைதிகத் தெய்வக் கோயில்களேயன்றிப் புத்த விகாரங்கள், சமணப்பள்ளிகள் பல இருந்தன. நகரங்களில் முருகனுக்குத் திருவிழா எடுத்தலும், அவன் திருவுலா வருதலும் அப்போது ஆடவர், மகளிர் எல்லாம் கண்டு தொழுதலும் உண்டு எனப் பட்டினப் பாலையால் அறிகின்றேம். குன்றவர் முருகனுக்கு வெறியாட்டு எடுப்பதும் பொதுவர் திருமாலுக்குக் குரவையாடுவதும் முதலியனவாகத் திணைநிலமக்கள் தெய்வத்தை வழிபடும் முறையும் படித்து இன்புறத்தக்கன. தெய்வங்கள் காப்பாக, மக்க

ளுக்குத் திருமாலின் ஐம்படைத் தாலி கோத்து அணிந்து வந்தனர். சிவபெருமானின் ஊர்தியும் கொடியுமாகிய ஆன் ஏற்றின் வடிவமும் சூலப் படையின் வடிவமும் செய்து குழந்தை களுக்கு அணிவித்தலும் உண்டு என மருதக்கலி யால் அறியலாம். இம்மை மறுமைகளின் நிலை யாமை உணர்ந்து இறைவன் திருவடிக்கண் வைக் கும் அன்பே அழியாத இன்பமாம் என உணர்ந்து பாடிய பாட்டும் உண்டு என்பதைப் பரிபாடற் செய் யுளால் அறியலாம்.

**புலமை, தறுகண்மை முதலாயின**

சங்ககாலத்தில் ஆடவர்களேயன்றிப் பெண்டி ரும் நிறைந்த புலமையும், சிறந்த வீரமும் உடைய ராய் இருந்தனர். பெண்டிர் புலமைக்கு அவ்வை யார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, ஆதி மந்தியார், வெள்ளிவீதியார் முதலியோரின் பாடல்களே சான்றும். மகளிர் வீரத்துக்கு மூதின் முல்லை முதலிய துறைகளில் அமைந்த பாடல்கள் சான்றுகும்.

சுருங்கக்கூறின் அரசியல், உளப்பண்பு, கல்வி யறிவு, சமய உணர்ச்சி, தறுகண்மை முதலிய சிறந்த நாகரிக வகைகளில் பண்டைத் தமிழர் இந் நாளினுஞ் சிறந்து வாழ்ந்தனர் என்றே தெரிய வரு கின்றது. இவ்வறிவை நமக்கு உதவும் சங்க நூல் களை நாம் போற்றிப் பயின்று பயன் பெறு வோமாக.

# 10. சோழ நாட்டுச் சிறப்பு

மணிகொண்ட திரையாழியை மருங்கு உடுத்த நிலமகளுக்கு மதிமுகம் போன்றது பரதகண்டம். அதன்கண் திருநுதல் போன்றது தென்றமிழ்நாடு. அதன்கண் அணிந்த திலகம் போன்றது சோழ நாடு. சோழ நாட்டின் சிறப்பினைத் தோலாநாவின் மேலோர் பலர் தத்தம் நூல்களினும் தனிப்பாக்களி னும் உளங்குளிரப் பாடியுள்ளனர். அன்னோர் புகழ்ந்த இந்நாட்டின் சிறப்பை யாமும் புகல முயலு தல் மாநாகம் வளைத்த மேருமலையைப் பூநாகமும் வளைக்க முயல்வதை யொக்கும். எனினும் ஒரு சிறிது முயல்வோம்.

**நிலவளமும் குடிவளமும்**

தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் நாட்டின் இலக்கணமாகக் கூறிய இயல்புகளனைத்தும் பொருந்தியது சோழநாடு. இந்நாட்டின்கண் மக் கள் உயிர்வாழ்வதற்கு வேண்டிய எல்லா உணவு களும் பெருமுயற்சி இல்லாமலே எளிதில் விளையத் தக்க விளை நிலங்களும் உள்ளன. விளைவிக்கும் உழவர்களும் உளர். வறுமை என்பதைக் கனவிலும் இந்நாட்டினர் அறியார். துறவோரும் அந்தணரும் புலவர் பெருமக்களும் கலத்தினும் காலினும் பெரும் பொருளீட்டும் வணிகரும் பல்வகைத் தொழிலிலும் வல்லவர்களும் தத்தம் முயற்சிக்கு இடையூறின்றி வாழ்கின்றனர். பசியும் பிணியும் இங்கு அணுகா; வசியும் வளனும் குறையா. நாடாவள முடையது இந்நாடு. (வசி-மழை)

**காவிரியாற்றின் சிறப்பு**

கடலின் நீரைக் கையாலள்ளி யுண்ட குடமுனிவர் (அகத்தியர்) அருந்தவமாற்றிப் பெற்றுக் கமண்டலத்தில் நிறைத்து வைக்கப் பெற்று ஐந்து கைப்பிள்ளையார் கவிழ்க்கப் பெருகி ஓடிவருவது காவிரியாறு. அது கோள்நிலை திரிந்து கோடை நீடிவான் பொய்த்த காலத்தும் தான் பொய்யாதது. சையமால் வரையிலிருந்து தண்புனல் பெருகி வருவதால் வையமாக மகளின் மார்பிற்கிடந்த மணியாரம் போல் விளங்குவது. பல்லுயிர்களையும் பரிந்தூட்டிக் காத்தலால் தாயெனப் புகழும் தகுதி வாய்ந்தது. தன் புனித நீரால் புணரியையும் புனிதமாக்குவது. இவ்வாற்றின் இரு கரையிலுமுள்ள அத்தனை சிவாலயங்கள் வேறு எவ்வாற்றின் கரையில் உள்ளன? செல்லும் வழியிலுள்ள சிவாலயங்கள் தோறும் பூவும் நீரும் பொன்னும் இறைத்து இறைவனை வழிபட்டு ஒழுகலால் எண்ணரும் பெருமையுடைய ஈசனடியார்களைப்போல் இலங்குகின்றது. "தாயைப் போலச் சேயர்" என்பதற்கிணங்க, காவிரியன்னையின் அமுதுண்டு வாழும் மக்களும் சிவபத்திச் செல்வர்களாய்த் திகழுகின்றனர்.

சென்றடையாத திருவுடையானாகிய குன்றுடையான் வாழும் சிராப்பள்ளியும், கானவர் மடமகள் வள்ளிநாயகியின் தெள்ளிய சுவைத் தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றும், பிரம்மச்சாரியென்றும் ஞானபண்டிதனென்றும் புகழப்பெறும் முருகப் பெருமான் கல்லால நிழலில் நால்வர்க்கு மெய்பொருளைச் சொல்லாமற் சொல்லிய தந்தை

யார்க்கு ஒரு மொழிப் பொருளைக் குருவாகியுபதே சித்துச் சாமிநாதன் எனப் பெயர்பெற்ற சாமிமலை யும் இந்நாட்டிற் குறிப்பிடத்தக்க குறிஞ்சி நிலங்க ளாம். முல்லைநிலம் மிகுதியாக இல்லையெனலாம். பாலைநிலம் சிறிதும் இல்லை. மருதமும் நெய்த லுமே மலிந்தது சோழநாடு.

### மருத வளம்

இந் நாட்டின் எல்லாப் பாகத்திலும் காவிரி யாறு கால் பரந்து பாய்கின்ற தோற்றம் பெரிய மரத்தின் அரை, கவை, கொம்பு, வளார், இலை, தளிர் முதலியவற்றின் தோற்றம் போன்றது. உடம்பின் நடுநிலையிலிருந்து நரம்புகள் கிளைத்துப் போய் உடல் முழுதும் பரவி யுள்ளனவும் போலும் வயல் நிலங்களில் நீர் பாயும் ஓசையும், உழவர் தொழிலின் முழக்கும், உழத்தியர் நாறு நடும் ஓசையும், களையடும் ஓசையும், குரவைப் பாட் டோசையும் கரும்பாலை ஓசையும், புள்ளினங்களின் ஓசையும் பெருகிக் கடலோசை போன்றொலிக்கும். நெற்பயிர் வளர்ந்து நிற்கும் காட்சி காவிரியின் குளிர்ந்த நீரால் நிலமகள் மயிர்ப்புளகம் கொண் டதுபோல் தோன்றும். பசும் பயிர்களினிடையே செந்தாமரையும் வெண்டாமரையும் பூத்து விளங்க, தாமரைப் பாசடைகளினிடையே பெரிய வெண் சங்கம் தவழ்ந்து செல்லுதல் நீல வானிடையே உடுக்குலங்கள் விளங்க மேகத்தினிடையே முழு மதியம் தவழ்ந்து செல்லுவதுபோல் தோன்றும். தெய்வ மலரென்று புகழப் பெறும் தாமரை மலர் களையும் களை களைபவர் பிடுங்கி எறிவர். எத்தனை

மேம்பாடுடையராயினும் பலர்க்கு இடையூருக இருப்பவர்களை யாவரே விரும்புவர்?

களைகளெல்லாம் கட்டபின்னர் நெற்பயிர் பசும் பாம்புபோல் சூல்கொண்டு கதிரீன்று புன்மாக்கள் செல்வம் பெற்றதுபோல் பணிவின்றித் தலை யுயர்த்தி இருந்து, பின் நுணங்கிய நூற்கேள்வி யுடையார்போற் பணிந்து நிற்கும். பத்தியுடைய திருத்தொண்டர் ஒருவரை ஒருவர் கண்டபோது வீழ்ந்து வணங்குவது போலவும் இருக்கும் அத் தோற்றம். ஒருங்கு தோன்றி ஒருங்கு வளர்ந்து ஒருங்கு அறுபடும் நெற்பயிர்கள் புவனங்கள் எல் லாம் இறைவனுல் ஒருங்கு படைக்கப்பட்டு இருந்து ஒரு காலத்து இறைவனுல் அழிக்கப்பெறும் என்ற உண்மையை உணர்த்தி, இவ்வுலகில் ஒன்று தோன்றி ஒன்று அழியக் காண்கின்ரேமேயன்றி எல்லாம் ஒருங்கே அழியாமையால் இவ்வுலகம் என்றும் ஒரே இயல்பாயுள்ளது. செயப்படுபொருள் அன்று. அதனுல் இதனை ஆக்கும் கருத்தா ஒருவன் இலன் என்று கூறுவாரின் . கூற்றை மறுக்கச் சிறந்த ஏதுவாக நிற்கும்.

அறுத்த நெற்கதிர்களை மலைபோல் போர் ஆக் குவர். பின்பு அதனை அதரிதிரிப்பதற்காக உழ வர்கள் அப்போரின்மேல் ஏறி நின்று நாட்காலை யில் ஆட்களை நாவலோ என்று அழைக்கும் ஒலி, மன்னர் போர்க்களத்தில் யானை மீது ஏறி நின்று பகைவருயிரைக் கொண்டுபோகக் கூற்றுவனை அழைக்கும் ஒலிபோலிருக்கும். உதிர்ந்த நெல்லைக் குன்றுபோன்றுயர்ந்த கூடுகளில் நிரப்பி வைப் பதால் புனல்நாடு என்று பெயர்பெற்ற இந் நாடு மலைநாடு போலத் தோன்றும். மன்னருக்குச்

சேரவேண்டிய ஆறிலொரு கடமையை மகிழ்ந்து செலுத்தி எஞ்சிய நெல்லை வயலில் வேலை செய்த ஆட்களுக்கும் இரவலர்க்கும் வெறுக்குந்தனையும் கொடுத்து மிகுந்ததை மனைக்கண் உய்த்து விருந் தோம்பி உழவர்கள் வாழ்வார்கள். காவிரியின் நீர் வளத்தாலும் அந்நாட்டின் பிடியெருவும் வேண் டாத நில வளத்தாலும் விளையும் விளைவின் மிகு தியை எடுத்துரைப்பது எவ்வாறு? **"வேலியாயிரம் விளையுட்டாகக் காவிரிபுரக்கும் நாடு"** என்று ஆன் றோர் கூறியது கற்பனையன்று, வாய்மையே. **"சோழவள நாடு சோறுடைத்து"** என்பது பொய்யா மொழியே.

நெல்லினருகே வாழையும் அதனருகே கரும்பும் அதனருகே மா, பலா முதலிய கனிதரு மரங்களும் வரிசை வரிசையாக நிற்கின்ற காட்சி பசியெனும் பகைவன் உள்ளே நுழையாதபடி படைகளை அணி வகுத்து நிறுத்தி வைப்பதுபோல் விளங்கும்.

தடாகங்களிலே எருமை புகுந்து குவளைப் பூக் களைக் குதட்டும். அதன் மடியிலே வரால் முட்டும். அதனைக் கன்றென்று கருதி மடிமடை திறந்து எருமை பால்சொரியும். அதனால் தடாகம் நிறைந்து அலை புரட்டும். நீரோடு கலந்த அப்பாலை வெண்டா மரைத் தவிசில் வீற்றிருக்கும் அன்னம் நீரினின் றும் பிரித்துண்ணும். அத்தோற்றம் நூற்பெருங் கடலுள் நுண்பொருள் தெரிந்து நாற்பயன் கொள்ளும் நாமகள்போன்றிருக்கும்.

பொய்கைகளிலும் பூஞ்சோலைகளிலும் புகுந்து நறுமணமும் பூந்தேனும் குளிர்ச்சியும் சுமந்து மெல்லிய நடையோடு திரியும் தென்றற் காற்று அடிவருடச் செழுங்கரும்பு கண் வளரும் தோற்றம்

கண்டார்க்கு உவகை பயக்கும். சோலையில் மந்தி பொன்னிறமாகப் பழுத்தபலாப்பழத்தைக்கவர்ந்து சென்று மரக்கவட்டிலிருந்து சுளைகளைப் பிடுங்கித் தின்னும் தோற்றம் நரசிங்கம் கம்பத்தினிடையே தோன்றி இரணியனைப் பிடித்து அவன் வயிற்றைக் கிழித்துக் குடரைப் பிடுங்கித் தின்பதுபோல் தோன்றும். இன்னும் அம்மருத நிலத்தின் வளமும் காட்சியும் சொல்லுக்கு அடங்குவனவன்றாகலின் இம்மட்டோடு நிறுத்துவோம்.

நெய்தல் நிலம்

காவிரியாறு கடலொடு கலக்கும் சங்கமத் துறையில் உள்ள காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பை யறியாதார் யார்? அதுபோல் வாணிபத்தால் பொருளீட்டிக் குபேரன் என்ன வாழ்கின்ற வணிகர்கள் மல்கிய பட்டினங்கள் பல சோழநாட்டின் கண் உள்ளன. திருமறைக்காடு, நாகப்பட்டினம், காரைக்கால் முதலிய பல பதிகள் நெய்தல் வளம் மிகுந்தவை. கடற்கரையில் பிற நாடுகளுக்குச் சரக்கேற்றிப் புறப்படும் கப்பல்களும் பிற நாட்டிலிருந்து வாணிபஞ் செய்து பொன்னோடு மீண்டு நிற்கும் கப்பல்களும் நிறைந்து நிற்கும். பெரிய மரக்கலங்கள் தேர்போல் விளங்க, படகுகள் யானைபோல் அசைந்து நிற்க, அலைகள் குதிரைபோல் தாவியோட, சுறுமீன்கள் வாளோடு போர் செய்யும் வீரர்போல் துள்ள, பறவைகள் பல்லியம்போல் ஒலிக்க, கடற்கரை ஒரு போர்க்களம்போல் காட்சியளிக்கும்.

சங்குகளும் சிப்பிகளும் ஈன்ற முத்துக்களும் புன்னை அரும்புகளும் வேற்றுமை உணர இயலாத

படி கடற்கரையில் கலந்து கிடக்கும். கடலோரங் களில் முடத் தாழைகள் மடல் விரிந்து சோறு கான்று நிற்கும் காட்சி கடற் புலவு நாற்றம் பொரு மல் கான்று நிற்பதுபோல் தோன்றும்.

கழிக்கரைகளில் நீண்ட கால்களோடு அலகை யும் நிலத்தில் ஊன்றி ஓடுமீனோட உறுமீன் வரு மளவும் அசையாது நிற்கும் நாரைகள், போலி வேடம் பூண்டு ஒழுகித் தக்க சமயம் பார்த்துத் தகாத ஒழுக்கத்தில் ஒழுகும் போலித் துறவிகளின் நிலைகாட்டும். தாழை மலரின் தாதிற்படிந்து கரு நிறம் மாறி வெண்ணிறம் படைத்த வண்டுகள் கழிகளில் மலர்ந்துள்ள பூக்கள்தோறும் இசை பாடிச் சென்றுசென்று தேனுண்டு திரியும் காட்சி வெண்ணீறு அணிந்து இறைவன் புகழை இசை யோடு பாடி மனைதொறும் சென்று ஐயமேற்றுண் ணும் தொண்டர் செய்கையைக் காட்டும். பரதவர் தம் திமில்களில் சென்று மீன்களைக் கொணர்ந்து குவிப்பர். நுளைச்சியர் சங்குகளையும் சிப்பிகளையும் அவையீன்ற முத்துக்களையும், பவளங்களையும், உப்புக் குவியல்களையும் தனித்தனிக் குவிப்பர். இவற்றின் வாணிபத்தின் வரும் பெரும்பொருளால் நெய்தனில மக்கள் குறைவற வாழ்வர்.

**அரசர்கள்**

இத்தகைய வளம் பொருந்திய இங் நாட் டைப் பல்லாயிரம் ஆண்டுகளாக ஆண்டு வந்தவர்கள் படைப்புக் காலந்தொட்டுச் சிறப்புப் பெற்றிருந்த சோழமன்னராவர். அவர்களது நீதி வழுவா நெறி முறைக்கு ஆவின் கடை மணி உகு நீர் தன் நெஞ்சு சுடத் தன் ஒரு மைந்தன்மேல்

தேர் விடுத்து நீதி வழங்கிய மனுச் சோழனே போதிய சான்ருவான். அவர்கள் வீரத்திற்கு இமய முதல் குமரி வரை என்பதல்லாமல் ஈழமும் தம் ஆட்சியில் அடங்க ஒரு மொழி வைத்து உல காண்ட கரிகால் வளவன், முதலாம் இராசராசன், கங்கை கொண்ட சோழன் முதலியோர்களே போதிய சான்ருவர்.

இச் சோழ மன்னர் வேதாகம நெறி பிறழாது சிவபத்தி குன்ருமல் சைவமும் தமிழும் தழைக்க ஆண்டு வந்தனர். கரிகால் வளவன், கோச்செங்க ணுன், முதலாம் இராசராசன், முதலாம் இராசேந் திரன், அனபாயன் முதலிய சோழர்களின் சிவபத் திச் சிறப்பை எவ்வாறெடுத்துரைப்பது? இவர்கள் தோன்றியிலரேல் இத்தனை சிவதலங்கள் எவ்வாறு தோன்றியிருக்கும்? தேவாரத் திருமுறைகள் எவ் வாறு நின்று நிலவும்? திருத்தொண்டர் புராண மென்னும் தெவிட்டாவமுது எவ்வாறு கிடைத் திருக்கும்? ஓரும் வேதாந்த துச்சியிற் பழுத்த சார மாகிய சைவசித்தாந்தம் எவ்வாறு இன்றும் நிலவு வதாக ஆகும்? சோழ மன்னரேயன்றி அம்மரபிற் சிறந்த மங்கையர்க்கரசியாரும் ஏனையோரும் சைவம் நிலைநாட்டிய தாய்மாரன்ருே? ஞானப்பா லுண்டு நான்மறை மொழிந்த ஞானசம்பந்தர் திரு வாக்கினுல் முன்னிலையில் வைத்துப் புகழப்பெற்ற பேறு இக்குலத்துப் பிறந்த பாண்டிமாதேவிக்கு வாய்த்ததுபோல் வேறு யாருக்கு வாய்த்தது? புறச் சமயப் படுகுழி வீழாது இறுதி வரையில் சைவ நெறியில் நின்ற மன்னர்கள் சோழர்களே.

### குடிகள்

"மன்னன் எப்படி வையகம் அப்படி"—என்பதற்கிணங்கச் சோழ மன்னராட்சியில் குடிகளும் சைவநெறி பிறழாது வாழ்ந்து வந்தார்கள்.

அறுபான்மும்மை நாயன்மார்களில் பெரும்பாலோர் சோழ நாட்டினர். அம்மையாரின் ஞானப் பாலுண்டு அமுத மயமாம் பாடல் மொழிந்து கொள்ளை கொள்ள வீடுதவிய பரசமய கோளரியார் பிறந்ததும் இத்திரு நாடன்றோ? இத்தகைய பெரியோர் பலர் தோன்றியதாலும் பிறநாட்டிற் பிறந்த அடியார் பலர் (திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தில் இருந்த திருக்கூட்டம் போல) இந் நாட்டில் வதிந்தமையாலும், கிளிகள் நாகணவாய்ப் புட்கள் முதலிய பறவைகளும் திருநெறித் தமிழ் பாடும் சிறப்புப் பெற்றுள்ளது இந்நாடு.

### கற்புடை மகளிர்

"**கொண்டானிற் றெய்வம் பிறிதில்லை**" என்று குறிக்கொண்டு ஒழுகுபவரும், பெய்யென்று பணித்து மழை பெய்விப்பவரும் ஆகிய இந் நாட்டு மகளிரின் கற்பின் பெருமைக்குக் கண்ணகி முதலிய கற்புடை மகளிர் அறுவருமே சிறந்த சான்றுவர். காரைக்காலம்மையார் ஆதிமந்தியார் போன்ற நல்லிசைப் புலமை மெல்லியர்களால் இந் நாட்டுப் பெண் மக்களது புலமையும் பத்தியும் கற்பின் திறனும் தெள்ளிதிற் புலனாகும்.

### சிவதலங்கள்

தொண்டர் குழாம் திரண்டு மூர்த்தி, தலம், தீர்த்தங்களை முறையே வழிபட்டு இம்மை மறு

மைப் பயன்களை யெய்தி இன்புறற் பொருட்டாக இறைவன் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கும் தலங்கள் இந் நாட்டில் உள்ளன போல வேறு எந் நாட்டில் உள்ளன?

கோயில் என்று சிறப்புப் பெற்றதும், எம் மிறைவன் ஐந் தொழில் திருக்கூத்து அநவ ரதம் ஆடுகின்ற சிறப்புடன் திகழப் பெற்றதும் ஆகிய சிதம்பரம் தன்பால் அமையப் பெற்றது இந் நாடன்றோ? வன்றொண்டப் பெருந்தகையை இடித் துரைத்துத் திருத்தொண்டத் தொகை தோற்று வித்த அன்பர் கூட்டம் பொலியும் திருவாரூர் இந் நாட்டின்கண் அன்றோ உள்ளது.

இந் நாட்டின் பெருமை அனைத்தும் எடுத்து இயம்ப இமையவராலும் இயலுமோ?

அருஞ்சொற்பொருள் :

புணரி—கடல்
வளார்—இளங்கொம்பு
அதரிதிரித்தல்—நெற்கதிரைக் கடாவிட்டு உழக்குதல்.
நாவலோ—நெற் போரிடுவோர் மகிழ்ச்சியினலிடும் ஒலி.
குதட்டும்—மெல்லும்.

# 11. சாத்தனுர் கோயில்கள்

தமிழ்மக்கள் தொன்றுதொட்டு வழிபட்டுவரும் தெய்வங்களுள்சாத்தனுரும்ஒருவர். மகாசாத்திரன் என்ற பெயரே மாசாத்தன் என்று திரிந்தது என்பதும் இவர் பாசண்டமாகிய தொண்ணூற்றறு வகைச் சமய சாத்திரத் தருக்கக் கோவைகளில் பயின்றவராதலால் பாசண்டச் சாத்தர் எனப்படுவர் என்பதும் சிலப்பதிகார உரையாசிரியராகிய அடியார்க்குநல்லாரது கருத்தென்று புலப்படுகிறது (சிலப்—கனுத்—14-15). சாத்தனுர்க்குக் கோயில் அமைத்து வழிபடும் வழக்கம் சிலப்பதிகாரத்தில் காணப்படுகின்றது. இக் காலத்தில் ஐயன்கோயில் என்ற பெயருடன் பல கோயில்கள் தமிழ் நாட்டில் பல இடங்களிலும் காணப்படுகின்றன. அவற்றுள் காப்பியக்குடி, பிடவூர் என்பவை சிறந்தவை. அப் பதிகள் யாண்டுள்ளன என ஆராய்வோம். சாத்தனுரைப் பற்றிய இனிய வரலாறு ஒன்று ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்ருகிய சிலப்பதிகாரத்தில் காணப் படுகிறது. அது வருமாறு :—

முன்ஞெரு காலத்தில் மாலதி என்பாளோர் பார்ப்பனி, தனது மாற்ருள் குழந்தைக்குத் தன் பாலைச் சங்காலூட்ட அப்பால் விக்கிக் குழந்தை

அவள் கையிலே இறந்தது. அதனால் மாலதி, 'என் மாற்றாளும், கணவனும் என்மீது அடாப்பழி கூறுவரே. இதற்கு என் செய்வேன்' என அஞ்சி, அம்மகவை எடுத்துக் கொண்டு, காவிரிப்பூம்பட்டினத்தேயிருந்த கற்பகக் கோட்டம், ஐராவதக் கோட்டம், பலதேவன் கோட்டம், சூரியன் கோட்டம், கைலாயக் கோட்டம், வச்சிரக் கோட்டம், நிக்கந்தக் கோட்டம் முதலிய கோட்டங்களுக்குச் சென்று தனது துயரைத் தீர்க்குமாறு குறையிரந்தும் தீராமையினால், பாசண்டச் சாத்தனார் கோயிலிலே பாடு கிடந்தாள். அவ்வேளையில் சுடுகாடு கோட்டத் திருந்த இடு பிணம் தின்னும் இடாகினிப்பேய், இளங்கொடி போன்ற பெண் வடிவாய் அணுகிப் பாடுகிடந்தாளை நோக்கி, "ஒரு குற்றமுமற்றவளே! முற்பிறப்பில் தவஞ் செய்தில்லாதவருக்குத் தேவர்கள் வரங்கொடார். நீ பாடுகிடந்து பயனென்ன? எங்கே நின் குழந்தையைப் பார்ப்போம்," என்று வாங்கித் தன் வயிற்றினிலிட்டு மறைந்தது. இறந்த சேயின் உடலையும் இழந்த மாலதியின் வருத்தம் காணப்பெறாத பாசண்டச் சாத்தர் அவளை நோக்கி, "அன்னாய்! நீ செல்கின்ற வழிமுன்னர்ப் பொதும்பரிடத்து அக்குழவி உயிரோடு கிடக்கிறது. கண்டிலையோ?" என, அங்குச் சென்று பார்க்க அவர் குழந்தையாய்க் கிடந்தார். அவள் அக்குழவியை ஐயமின்றி எடுத்துச் சென்று தாய் கைக்கொடுத்தாள். அக்குழவியாகிய சாத்தனாரும் கல்வி கேள்விகளில் துறைபோய்த் தந்தையாரிறந்த பின்னர் நீர்க்கடன் முதலிய செய்து, தாயத்தாரோடு வழக்குரைத்துத் தேவந்தி என்னும் மனைவியோடு எட்டியாண்டு கூடி வாழ்ந்தனர். பின் தம் மூவா இள

நலத்தைத் தம்மனைவிக்குக் காட்டி உண்மையை யுரைத்து அவள் குறிப்பினையறிந்து அதற்கு ஏற்ப அவளுக்கு நீ எம் கோட்டத்துக்கு வா என அருளிச் செய்து பிறர்க் கெல்லாம் தீர்தத்துறைபடிவேன் என்று நீங்கினார் என்பது.

இங்ஙனம் மாயக் குழவியாகி வளர்ந்தது காப்பியக் குடி என்னும் பதியாகும் என்பது "காப்பியத் தொல் குடிக் கவின் பெற வளர்ந்து"—என்று சிலப் பதிகாரத்து வரந்தரு காதை 83-ஆம் அடியால் போதருகிறது. இந்தக் காப்பியக்குடி என்பது தஞ்சை மாவட்டத்தில் சீர்காழிக்கு வடகிழக்கில் அண்மையில் உள்ளது என்பது, மகாமகோபாத் தியாய டாக்டர் ஐயர் அவர்கள் கருத்து. இங்குச் சாத்தனார்கோயில் இன்னும் நின்று நிலவுகின்றது.

## ஆதி உலாவை வெளிப்படுத்திய சாத்தனார் எழுந்தருளியிருக்கும் பிடவூர்

பிடவூர் சாத்தனாரைப் பற்றிய ஒரு வரலாறு திருத்தொண்டர் புராணத்து வெள்ளானைச் சருக் கத்தால் அறியலாகும். அஃதாவது, சேரமான் பெருமாணயனார் திருக்கயிலாயத்தில் சிவபெரு மான் திருமுன்பு விண்ணப்பித்த ஆதி உலாவை மாசாத்தனார் கேட்டறிந்து வந்து திருப்பிடவூரில் வெளிப்படுத்தினார் என்பது. இதனை,

'சேரர் காவலர் விண் ணப்பஞ் செய்த
அத்திரு உலாப் புறம் அன்று
சாரல் வெள்ளியங் கயிலையிற் கேட்டமா
சாத்தனார் தரித்திங்தப்
பாரில் வேதியர் திருப்பிட ஹூர்தனில்
வெளிப்படப் பகர்ந்தெங்கும்
நார வேலைசூழ் உலகினில் விளங்கிட
நாட்டினர் நலத்தாலே'

என்று பெரிய புராணம் வெள்ளானைச் சருக்கத்து 52-ஆம் திருப்பாட்டுச் செப்பும். அத்திருப்பாட்டில் குறிப்பிடப் பெற்ற பிடவூர் யாண்டுள்ளது என்னில் திருச்சிராப்பள்ளியிலிருந்து பிரம்பலூர்க்குப் போகும் பெருவழியில் உள்ள செருகனூர்க்கு மேற்கே மூன்றுமைல் தூரத்தில் இருக்கின்றது.

பண்டைப் பெருமக்கள் தம் வரலாற்றுக் கருவூலமாய் அமைந்துள்ள புறநானூற்றின் 395-ஆம் பாட்டில்,

''செல்லா நல்லிசை உறந்தைக் குணாது
நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும''

(அடி: 19-21)

என்பதில் பாட்டுடைத் தலைவன் பெயர் சாத்தனார் என்று குறிக்கப் பெற்றுள்ளது. அதன் கீழ்க் குறிப்பிலும் சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ் சாத்தன் என்று அவன் பெயர் குறிக்கப்பட்டிருக்கிறது. அப்பாட்டுடைத் தலைவனுக்கு அவ்வூரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள மாசாத்தனார் பெயரே இட்டிருக்கலாமென்று காலஞ் சென்ற மகாமகோபாத்தியாய டாக்டர் ஐயர் அவர்கள் அப்பாட்டின் கீழ்க்குறிப்பெழுதியுள்ளார்கள். தம் ஊரில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள தெய்வத்தினது பெயரைத் தம் மக்களுக்கு இடும் வழக்கம் பண்டும் இன்றும் தமிழ் மக்களிடத்தில் காணப்படுவதொன்றே யாகும். இவ்வூர் இப்போது திருப்பட்டூர் என்று வழங்கப்படுகிறது. ஈண்டுள்ள ஐயனார் கோயிலில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கோயில் கல்வெட்டுக்களுள் இவ்வூர் ''புவனமுழுதுடைய வளநாட்டுத் திருப்பிட

வூர் நாட்டுத் தேவதான பிரமதேயங் திருப்பிடவூர் உடையார் திருமண்டப முடையார்க்கும் திருவேப் பங்தெற்றி உடையார்க்கும்''—என்று காணப்படு கிறது. மேற்கூறிய புறநானூற்றுச் செய்யுளில் உறந்தைக்குணுது பிடவூர் என்று குறிப்பிட்டிருப் பதாலும், உறையூர்க்குக் கிழக்கே வேறு பிடவூர் காணப்படாமையாலும் ஈண்டுக் கூறிய பிடவூரிலே ஐயனுர் கோயில் சிறப்பாக இன்றும் விளங்குவதா லும் இதுவே மேற்கூறிய புறநானூற்றுச் செய்யு ளில் கூறப்பட்டதும் பெரிய புராணத்தில் கூறி யாங்கு மாசாத்தனுர் திருவுலாப்புறத்தை வெளியி டப் பகர்ந்ததும் ஆகிய பிடவூராகும் என்பது தேற் றமாம். மேலும் இங்கு எழுந்தருளியிருக்கும் ஐய ஞர் தமது இடது திருக்கையில் சுவடி ஒன் றைப் பிடித்துக் கொண்டிருக்கிருர். பொதுவாக எல்லா ஐயனுர்க்கும் வலது கையில் செண்டு இருக் கும். அச்செண்டு இவர்க்கு இல்லே. இந்த ஐயனுர் திருமேனியில் கல்லினுல் செதுக்கப்பட்ட உருத்தி ராக்க மாலேகள் இருக்கின்றன. இவ்வூர் முதியோர் இவ்வையனுரை அரங்கேற்றின ஐயனுர் என்றழைக் கின்றனர். எனவே இவ்வையனுரே ஆதி உலாவை வெளியிட்டருளியவர் ஆவர் என்பது உறுதி.

இவ்வூர் முடியுடை வேந்தர்க்கு மகட்கொடைக் குரியராகிய வேளாண் பெருமக்கள் வாழிடமாயும், தேவார வைப்புத் தலங்களில் ஒன்ருகியும், பேரரு ளாளன் பிடவூரன் என்று தேவாரத்திலும் பாராட் டப்பெற்ற தலேவன் வாழ்ந்ததாகவும் விளங்கும் சிறப்பமைந்ததாகும்.

## 12. சைவமும் தமிழ் இலக்கியமும்

ஒரு நாட்டினரின் பழக்க வழக்கங்களையும், அவர்கள் உள்ளத்துக்கிடந்த சிறந்த கொள்கைகளையும், தெள்ளிதிற் புலப்படுத்த வல்லன, அவர்கள் தாய்மொழியானியன்ற சிறந்த இலக்கியங்களேயாம். காலநிலைக்கு ஏற்ப மக்களின் நோக்கங்களும், பழக்க வழக்கங்களும், மாறுபடுவது இயல்பே. அத்தகைய மாறுபாடுகளைப் பிற்காலத்தார் உள்ளபடி உணர்ந்து கொள்வதற்கு உதவியாயிருப்பதும் சிறந்த இலக்கியங்களே. ஒரு காலத்திருந்த மக்களின் உள்ளம், எதன்மாட்டு ஆர்வம் கொண்டிருந்தது என்பதை அக்காலத்திலிருந்த நல்லிசைப் புலவர்கள் இயற்றிய நூல்களாலேயே உணரலாம் என்பது இலக்கிய வரலாறு உணர்ந்தவர்களுக்குத் தெள்ளிதிற்றெரியக்கூடியதாம். ஒவ்வொரு காலத்து எழுந்த நூல்கள் பெரும்பாலும் ஒரேவகையான உட்கிடையமைந்திருக்கின்றன. நம் செந்தமிழ் நாட்டில் சங்க காலத்தினும், அதற்கு முற்பட்ட காலத்தினும், இயன்ற சிறந்த இலக்கியங்களின் உட்கிடை, பெரும்பாலும் அகப்பொருட்டிறமும் புறப்பொருட்டிறமுமேயாம். புறப்பொருட்சுவையினும் அகப்பொருட் சுவையே மக்களது உள்ளத்தைக்

கவர்ந்தது என்பதற்குச் சங்கத் தொகை நூற்க ளில் அகப்பொருள் இலக்கியங்கள் மிக்கிருப்பதா லேயே நன்கு உணரலாம்.

> "நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
> றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
> கற்றறிந்தோ ரேத்துங் கலியோ டகம்புறமென்
> றித்திறத்த எட்டுத் தொகை."

என்று எண்ணப்பட்ட பழைய தொகைநூல்கள் எட்டில் புறம், பதிற்றுப்பத்து ஒழிந்த ஏனைய நூல் கள் இவ்வகத் திணைப்பற்றி அமைந்தனவே யாகும். கடைச்சங்க நாளில், ஒரு காலத்தே, பொரு ளிலக்கண மறிந்த புலவர் கிடையாமற் பாண்டி யன் புடைபடக் கவன்றபோது என்னை? எழுத் துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே. பொருளதிகாரம்பெறேமே எனின் இவை பெற்றும் பெற்றிலேம் என அவ்வரசன் கூறினனென்றும் அக்காலத்தே இறையனாரே முன்னின்று அவன் கவற்சி நீங்க அகப்பொருள் இலக்கணம் ஒன்றை அருளிச் செய்ய அதற்குப் புல வரைக் கொண்டு அவன் பொருள் கண்டனரென் றும் கேட்கப்படும் செய்தி அக்காலத்து அகப் பொருளாராய்ச்சியில் மக்களுக்கிருந்த ஊக்க மிகு தியைப் புலப்படுத்தும்.

கடைச் சங்கத்திறுதியிலிருந்த தெய்வப் புல மைத் திருவள்ளுவனார் காலமுதல், அவர் இயற் றிய திருக்குறளைப் பின்பற்றி அறம், பொருள், இன்பங்களை ஒருங்கேயமைத்து (அறத்துப்பாலை யும் பொருட்பாலையும் பெருக்கி) நூலியற்றுவதே புலவர்களினியல்பா யிருந்திருக்கலாம். இதனைப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிற் பெரும்பான்

மையானவை அத்தகையனவாயிருப்பதே வலி யுறுத்தும்.

சங்க காலத்து இறுதி தொடங்கி நாயன்மார் கள், ஆழ்வார்கள், காலம் வரை நாட்டில் பௌத்த சமண சமயக் கொள்கைகள் பரவி மக்கள் உள் ளம் அவற்றிடை யூறிக் கிடந்தமையால் அச்சம யங்களின் கொள்கைகளை உட்கிடையாகக் கொண்ட இலக்கியங்கள் பல தோன்றலாயின.

அதன்பின்னர் முறையே சைவ வைணவ சம யச் சார்பான தேவாரம், திவ்யப்பிரபந்தம் முத லிய புகழ்ப் பாக்களும், தல புராணங்களும் பிறவும் ஒன்றன்பின் ஒன்ருய்த் தோன்றின. இங்ஙனம் காலந்தோறும் மக்கள் கருத்தும் அதற்கேற்பத் தமிழ் இலக்கியங்களின் உட்கிடையும் மாறுதல டையினும் சில சிறந்த கொள்கைகளும் வழக்கங்க ளும் மாறுதலடையாமல் தொன்றுதொட்டு இன்று வரை நிலவுகின்றன. சைவ சமயக் கொள்கையும் சிவ வழிபாடும் அத்தகையனவே. ஆதியிற்றமிழ் நூல் அகத்தியற்கு மாதொருபாகர் உணர்த்திஞ ரென்றும் பின்னர் குன்றமறிந்த குமரவேல்பால் அக்குறுமுனிவர் தமிழ் உணர்ந்தார் என்றும், மேற் கூறிய திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்ற மெறிந்த குமரவேலும் தலைச் சங்கத்திருந்து தமிழா ராய்ந்தனரென்றும் வரலாறுகள் கேட்கப்படுவதிலி ருந்தே தமிழுக்கும் தமிழ்த்தெய்வமாகிய சிவத்துக் கும் சிவனருள் சைவமாகிய சைவத்துக்கும் உள்ள தொடர்பு காலவரம்புக்குட் படாதெனல்தெரிய வரு கிறது. சிவனருளால் செந்தமிழுணர்ந்த தென்பொ திய முனிவரின் சீர்சால் மாணவராகிய தொல்காப் பியனுர் இயற்றிய இலக்கணந்தான் இக்காலத்தி

லுள்ள தமிழ்நூல்களிற் காலத்தால் முந்தியதெனத் தமிழறிஞர் பலருங் கூறுவர். அவ்வரும் பெரும் இலக்கண நூலுள்ளும் குறிப்பாகப் பல சைவ நூற்கருத்துக்கள் அமைந்துள்ளவை அறிஞர்க்குப் புலனாகும். "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" என்பது முதலிய தொடர்கள் சைவநூற் சார்பினவே. இப்போது காணப்படும் சங்க இலக்கியங்களிலும் ஆங்காங்கு **"ஆலமர் செல்வன்", "முக்கட்செல்வன்", "பிறவாயாக்கைப் பெரியோன்"** முதலியவாய், சிவபெருமான் திருபேர்கள் பேசப்படுதலாலும், சங்கநூற்களுக்குப் பின் எழுந்த சமண நூல்களிலும் **"போகமார்த்த புண்ணியன்"** என்பதுபோலப் பல பெயர்களால் சிவபெருமான் பேசப்படுதலாலும், சிவனது பெருபெருமையும் அவனது வழிபாடும் நாட்டில் இடையராது மக்களால் போற்றப்பட்டு வந்தது தெரியப்படும். பௌத்தசமண சமய இலக்கியங்களுக்குச் சற்று முன்னோ பின்னோ சைவசமய ஆசிரியர்களாகிய நால்வர் தோன்றிச் சைவமும் தமிழும் தழைத்தோங்கச் செய்தனர்.

அவர் காலத்துக்குப் பின் எழுந்த தமிழ்த் தலபுராணங்களும் பெரும்பான்மை சைவத்தை விளக்கத் தோன்றியவையே. அருண்மொழித் தேவராம் தெருண்மிகு பெரியாரருளிய திருத்தொண்டர் புராணமோ வெனின் சைவத்துக்கோர் கண்ணும் தமிழுக்கோருயிருமாயுள்ளது. சைவசந்தான ஆசிரியன் மார்கள் அருளிய சித்தாந்த நூல்களனைத்தும் அத்தகையனவே. சிறு காப்பியங்கள் தோன்றிய காலத்தினும் சைவச் சார்பான சிறு காப்பியங்களே மிகுதியாகத்தோன்றலாயின. அம்முறையில்

தமிழும் சைவமும் வளர்த்த பெரியார்கள் பலருள் குமரகுருபர முனிவர், சிவப்பிரகாச முனிவர், மாதவச் சிவஞானமுனிவர் மிகச் சிறந்தோராவர். இந் நாள்வரையும் உள்ள சிறந்த தமிழ் இலக்கியங்களெல்லாம் வகுத்துப் பார்ப்பின், சைவச் சார்புடையன மிக்கிருக்குமென்பது தடையின்றி ஏற்றுக் கொள்ளத்தக்க துணிபேயாம்.

தமிழும் சைவமும் நம் நாட்டுக்கு உடலும் உயிரும் போன்று ஒன்றையொன்று இன்றியமையாதவையாயிருக்கின்றன. தண்டமிழ்ப் பயிர் ஓம்பிச் சைவப் பெரும் போகத்தை நுகர்வது தமிழ் மக்கள் தனிக்கடமையாகும். தமிழரே எழுமின்! சைவரே வம்மின்! இறைவரே திருவருள் செய்வீராக.

# 13. மாணிக்கவாசக அடிகளாரும் அவரது நூல்களும்

தமிழ் மணக்கும் பாண்டி வள நாட்டிலே வைகையாற்றின் கரையிலே உள்ளது திருவாத வூர். அவ்வூரிலே அமாத்தியப் பிராமண குலத் திலே மாணிக்கவாசகர் அவதாரஞ் செய்தருளினுர் அவர் பதிறுைறு வயதினுள் வேதம் முதலான எல் லாக் கலேகளேயும் கற்று வல்லவராயினுர். அவரு டைய கல்வித் திறமை முதலியவற்றை அறிந்த அரிமர்த்தன பாண்டியன் அவரை வரவழைத்து முதல் அமைச்சராக்கி மேம்படுத்தினுன்.

இந்திரனேப் போன்ற செல்வமும் இன்பமும் அதிகாரமும் எய்தியும் அவற்றிலே மனப்பற்று மீக் கொள்ளாமல் இவ்வுயிர் பிறந்து மீள இறந்திடும் என்று இரங்கி "வெவ்வெயில் வருத்த முற்ருர் மெல் நிழல் விரும்புமா போல்" சிவபெருமான்பால் அன்பு கொண்டிருந்தார். கூத்தினர் தன்மைவேறு, கோலம் வேருகுமாறு போல உள்ளம் இறைவன ருளே நாட வெளியே அரச நீதியும் வழுவாமல் நடத்தி வந்தார். இந் நிலேயில் அரிமர்த்தன பாண் டியன் பரிமா வாங்கி வரும்படி ஏவ, மாணிக்கவாச கர் நிறையப் பொருள் எடுத்துக்கொண்டு திருப் பெருந்துறைக்குச் சென்ருர். அதுகாலே செந்தமி

ழின் வந்த சிவஞான அமுதுண்டாம் அந்தமில் அருட்கடலாகிய மாணிக்கவாசகரை ஆட்கொள்ள வேண்டி இறைவன் அடியார் குழாமொடு குருந்த மரநிழலில் எழுந்தருளியிருந்தான். மாணிக்கவாச கர் பெருந்துறையை அடைந்து குருந்தடியிருந்த குருவின் திருவுருவைக் கண்டு இறைவனே என்னை யாள இவ்வாறு எழுந்தருளி வந்துள்ளான் என எண்ணினவராய்,

''மின்னினு நிலைமையில்லா விழுப்பொருள் யாவும்
வேண்டேன்
உன்னடி யணைந்து நாயேன் உறுபவம் ஒழித்தல்
வேண்டும்
என்னையின் றடிமைகொள்வாய் எம்முயிர்க் கிறைவா
வென்று
முன்னுற வணங்கி நின்றார் முகமெலாம் கண்ணீர் வார.''

அவ்வாறு வணங்கி நின்ற அமைச்சரை ஐய னார் ஆட்கொண்டருள மனவலி கெடுத்து, இன்ப வெள்ளத்தில் திளைக்க வைத்தார். இறைவன் அருள் பெற்று ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிய மாணிக்கவாசகர் பரிமா வாங்குவதற்குத் தாம் கொண்டு சென்ற பொருள் அனைத்தும் குருநாதன் கட்டளைப்படி திருப்பணிக்கும் அருந்தவர்க்கும் அளித்தார். மன்னவர் வேடம் ஒழிந்தார். உருத் தெரியாத நீறும் கோவண உடையும் குஞ்சி விரித் துள சிரமும் தூநீர் மிகப்பொழி விழியுமானார். உடன் வந்த பரிவாரங்கள் திரும்பிச் சென்று பாண்டியன் பால் நிகழ்ந்ததை மொழிந்தனர். அவன் மிகச் சினந்து மாணிக்கவாசகரை அழைத்து வரும்படி தூதுவரை ஏவினான். தூதுவர் மொழிந்த மாற்றத்தை மாணிக்கவாசகர் தம் குருநாதன்பால்

உரைப்ப, அவர், "நீ சென்று ஆவணி மாதம் மூல நாளில் குதிரைகள் வருமென அரசன்பால் கூறு" கெனப் பணித்தனர். அவ்வாறே அடிகளும் திரும்பிச் சென்று அரசன்பால் மொழிந்தனர். இறைவனும் அடிகள்பொருட்டு நரிகளை எல்லாம் பரிகளாக்கிக் கொணர்ந்து அரசனுக்கு விற்ருன். பின் பரிகளை நரிகளாக்கிஞன். தன்னை ஏமாற்றிஞரென்று சினந்து மாணிக்கவாசகரை அரசன் ஒறுத்தவேளையில் வைகையாற்றைப் பெருகக் செய்தார். மண் சுமந்து கூலிகொண்டு அக் கோவால் மொத்துண்டார். பாண்டியன் அடித்த பிரம்படி அவன் மேலும் ஏனைய நிற்பனவும் நடப்பனவுமான உயிர்களின் மேலும் பட்டதறிந்த பாண்டியன் மாணிக்கவாகரின் பெருமை உணர்ந்து தன் குற்றத்தை மன்னிக்கும்படி இரந்தான். பின் மாணிக்கவாசகர் மதுரையை நீங்கிப் பல சிவதலங்களையும் கண்டு வணங்கித் தில்லையை அண்மிச் சிவலோக நிட்டை சாதித்து வீற்றிருந்தார்.

அஞ்ஞான்று தில்லைக்குவந்து வாதுக்கழைத்த ஈழத்துப் புத்தர்களை வாதில் வென்ருர். இறைவனை இகழ்ந்த புத்தர்களை மூகராக்கிஞர். மூங்கைப் பெண்ணை மொழிவித்தார். சைவப் பயிரைப் புறச் சமயக் களைகட்டு, காத்து ஓம்பிஞர்.

இறைவன் பாண்டி நாட்டு அந்தணஞக அடிகள்பால் வந்து அவர் அருளிச் செய்த திருவாசகப் பனுவல்களையும் திருச் சிற்றம்பலக் கோவையாரையும் தன் அருமைத் திருக்கை சிவப்ப எழுதிக் கொண்டு சென்று திருக்களிற்றுப் படியிலே வைத்தான். மறுநாட் காலையில் பொன் மன்று வழிபடச்சென்ற தில்லைவாழ் அந்தணர்கள் திருமுறை

யைக் கண்டு படித்துப் பார்க்கையில் முறையின் கடைசி ஏட்டில் **மாணிக்கவாசகன் சொல்லத் திருச்சிற்றம்பல முடையான் எழுதியது** என எழுதியிருக்கக் கண்டு வியந்து அம் முறையின் பொருளை அடிகளார் திருவாயினின்றே கேட்க விரும்பி அவரை அம்பலத்துக்கு அழைத்து வந்தனர். அடிகளார் அம்பலவரைச் சுட்டிக் காட்டி இவரே இப் பாடல்களின் பொருள் என்று கூறி மறைந்து இறைவனது மலர் சிலம்படியிற் கலந்து நிறைவெய்தினர். இதுவே மாணிக்கவாசக அடிகளாரது வரலாற்றுச் சுருக்கம்.

இனி அடிகளாரின் நூல்களைப் பற்றி ஒரு சிறிது கூறுவாம். அடிகள் அருளிச் செய்த நூல்கள் திருவாசகம், திருக்கோவையார் என்னும் இரண்டே. இவற்றுள் திருவாசகம் உழைக்கரனுக்கு அன்பாகி உண்மை அறிந்து உலகமெல்லாம் பிழைக்கப் பாடிய அருட் கவியாகும். வாதவூரர் என்னும் திருப்பாற் கடலில் தோன்றிய செந்தமிழ் வடிவாகிய சிவஞான அமுதம் அடிகளாரது உள்ளமாகிய கொள் கலம் நிரம்பிப் பொங்கி வழிந்து திருவாய் மலர்வழியே வழிந்த சிவானந்தத் தேன் வெள்ளம் ‘திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்’ என உலகம் கூறும்படி கனிவு மிகுந்தது. அதன் பெருமையை எம் போன்ற சிற்றறிவினர் எவ்வாறு எடுத்து இயம்புவது? திருவருட் பெருஞ் செல்வர்களாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் திருவருட் பிரகாச வள்ளலார் போன்ற ஆன்றோர்களின்

அருள் மொழிகளாலே அறியத் தக்கது. திருவாச கத்தின் பெருமையை,

"விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணன்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேங்
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்க
டொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே"

என்னும் சிவப்பிரகாச அடிகளாரது திருவாக்கா லும், அதற்கு "விளங்குகின்ற அணிகலன்களை உடைய உமாதேவியார் பங்கிட்டுக் கொண்ட திருமேனியையுடைய மூன்று கண்களையுடைய உலக காரணனாகிய சிவபெருமானது திருவாக்கு என்று சிறப்பித்துச் சொல்லும் வேதவாக்கோ? அச்சிவபெருமானது சிறப்பைத் துதிக்கின்ற திரு வாதவூர்த் தலைவராகிய மாணிக்கவாசகரது செங் குமுதம் போன்ற வாயினின்றும் உண்டான திரு வாசகமாகிய தேன்தானோ? சிறந்தது யாதோ என்று வினவுவீரேல் மக்கட் பரப்பையுடைய இவ் வுலகத்தில் வேதத்தைப் பலமுறை ஓதினாலும் கண் களினின்றும் நீரைப் பெருகச்செய்து மனம் குழைந்து உருகி நிற்கின்றவர்களை யாம் கண்டி லம்; திருவாசகத்தை ஒருமுறை ஓதினாலும் கருங் கல்லைப்போன்ற மனமும் உருகிக் கசிய, தோண்டு

கின்ற மணற் கேணி சுரக்குமாறு போல கண்கள் நீர் பெருகிச் சுற்றும் பாய, உடலிலுள்ள மயிர்கள் சிலிர்க்க நடுநடுக்கம் அடைந்து அன்பர் ஆகுபவரல்லது அன்பர் ஆகார் இலர்" என்னும், திரு. கோ. இராமலிங்கத் தம்பிரான் அவர்களது பொழிப்புரையாலும் அறியலாம்.

இறைவனை நினைந்து நினைந்து உணர்ந்து கரைந்து கரைந்து திருவருட்பாக்கள் மொழிந்த வடலூர் வள்ளலார் ஆளுடைய அடிகள் அருண் மாலையில்,

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ்
சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.
வாட்டமிலா மாணிக்க வாசக!நின் வாசகத்தைக்
கேட்டபொழு(து) அங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளும் மெய்ஞ்ஞான
நாட்டமுறும் என்னில்இங்கு நானடைதல் வியப்பன்றே."

என அருளிச் செய்திருப்பது நோக்கத் தக்கது.

எடுத்துக் காட்டாக ஒரு திருவாசகப் பாடலை ஈண்டுக் குறிப்பாம்.

"பற்றுங்கவை அற்றீர்பற்றும் பற்றுங்கது பற்றி
நற்றுங்கதி யடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின்
தெற்றார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை
இறைசீர்
கற்றுங்கவன் கழல்பேணின ரொடுங்கூடுமின் கலந்தே"

### இப்பாடலின் பொருள்

நல்லகதியை அடையவிரும்புவீர் ஓடிவாருங்கள். பிறவிக்காரணமான பற்றுக்கள் நீங்கப்பெற்று,

பற்ற வேண்டிய பற்றினைப் பற்றுங்கள். பற்ற வேண்டிய பற்றுவது சடைமுடியானாகிய திருப் பெருந்துறை இறைவனே தான். அவனுடைய புகழ்களைக் கற்றுக்கொண்மின். அவன் திருவடி களையே பேணிய அடியார் கூட்டத்தில் உள்ளங் கலந்து கூடுமின் என்பதாம்.

நல்ல கதியை அடைய விரும்புவோருக்குத் தான் அறிவு புகட்டிற் பயன்படும். ஆதலால் நற் றாங்கதி யடைவோமெனின்—என்றார். வீணாகப் பல நாள் கழிந்தமையையும் நல்ல நெறி அறியாது உழல்வதையுங் கண்டு இரங்கி கெடுவீர் என்றார். இது இரக்கக் குறிப்பு. காலமுண்டாகவே காதல் செய்துய்ம்மின் (திருவாசகம்) என்றபடி ஓடிவம் மின் என்றார்.

''பற்றுக பற்றற்றான் பற்றினைப் பற்றைப்
பற்றுக பற்று விடற்கு''

என்ற பொதுமறையின் பொருள் இத் திருப்பாட் டில் பொதிந்துள்ளமை காணலாம். இறைவனது பொதுவியல்பு சிறப்பு இயல்புகளே ஈண்டு சீர் என னப்பட்டன. சீர் கற்றலோடு அடியாருடன் கூடு தலே சிறந்த பயன் ஆதலும் கூறப்பட்டுள்ளது. இதில்,

''செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே,''

என்ற சிவஞான போதக் கருத்தும் அமைந்துள் ளது. மற்றொரு நூலாகிய திருக்கோவையாரின் சிறப்பை,

"ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்ப
ரேரணங் காணென்ப ரெண்ண ரெழுத் தென்ப
ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே,"
(திருக்கோவையாரின் பாயிரம்)

என்னும் செய்யுளால் அறியலாம்.

அந்தணர்க்கு அருமறையாகவும் யோகியர்க்கு ஆகம மாகவும், காமுகர்க்குக் காம நூலாகவும் இன்னும் யார் எவ்வகை நோக்குடன் பயிலினும் அவரவர்க்கு அவ்வத்துறை நூலாக அமைந்துள் ளது திருக்கோவையாரென்பது அப்பாட்டின் பொருள். திருக்கோவையார்ப் பாடல்களுக்கு அகப் பொருள் துறையை விளக்கும் கொளுக்கள் அமைந்திருப்பதுபோல் ஞானப்பொருள் விளக்கும் கொளுக்களும் உண்டென்பர்.

இத்தகைய அருட்பனுவலைப் பலகாலும் படித் துப் பயன் பெறுவோமாக.

# 14. கவியின்பம்

மாணவர்களுக்குரிய செய்யுட் பாடத்தில் பல இலக்கியங்களினின்றும் சுவையுடைய கவிகள் திரட்டப்பட்டு உள்ளன. அக்கவிகளைச் சுவைத்து மகிழ்வுறும் மகிழ்ச்சியே இங்குக் கவியின்பம் என்னப்படும். இன்ப மென்பது மனத்தின்கண் உள்ள சினம், கவலை, அவலம் முதலியவற்றையும் மீறி, மகிழ்ச்சியொன்றே தோன்ற அதில் திளைத்து நிற்பதாம். அவ்வின்பம்தானும் பல காரணங்களால் மனத்தின்கண் உதிக்கும். உதாரணமாக நின்பகைவன் பட்டான், பலநாள் மகவின்றி இருந்த நினக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது (மாமனார் வீட்டில்). நீ நமது மாநிலத்திலேயே முதல்வனாகத் (**Presidency first**) தேர்ச்சி பெற்றுள்ளாய் என இவை கேட்ட காலத்து, அவரவர் மனத்தில் உதிப்பவை. இவையனைத்தினும் தலைசிறந்த இன்பம் பயக்க வல்லது யாதென்னில் கற்றுவல்ல நல்லிசைப் புலவர் தம் நூலில் அமைத்த பொருளைக் கேட்பதுவேயாம். கவிஞன் கூறுவது ஒரு கற்பனை; வெறும் பொய் எனத் தெரிந்து வைத்தும் அவனை யறியாமலேயே அகமகிழ்ச்சியில் திளைக்குமாறு செய்ய வல்லது இக்கவியின்பம்.

இதனை, "சீதாபிராட்டியார் கண்கவரும் அழகின் பொலிவோடு கண்டார்க்குப் புதியதோர்

மகிழ்ச்சி விளைவிக்கத் தக்க அத்தகைய தோற்றத் தோடு நின்ருர். அத்தோற்றம் தரும் மகிழ்ச்சிக்கு எதை உவமை கூறலாம் என்று கவிச்சக்கரவர்த்தி யாகிய கம்ப நாடர் கருதி முடிவாக "செஞ்சொல் கவியின்பம் போல" அப்பிராட்டியார் நின்ருர் எனக் கூறுகிருர். (பாலகாண்டம்: மிதிலைக் காட்சிப்படலம்) இவ்வாறு கூறியிருப்பது கொண்டு நாம் கவியின்பம் என்பது ஒன்று உண்டு என அறிகின்ருேம். "கம்பநாடன் கவிதையிற் போற் கற்ருேர்க்கிதயம் களியாதே"—என ஒரு வர் கூறுவதும் இதை வலியுறுத்தும். இன்னும் இக்கவிக்குக் காரணமாகக் கற்கும் கல்வியானும் ஓர் இன்பம் தோன்றும். அது கல்வியின்பம் என வள்ளுவர் கூறுவர்.

அது,

> "தாம் இன்புறுவது உலகுஇன் புறக்கண்டு
> காமுறுவர் கற்றறிந் தார்"

என்னும் திருக்குறளால் அறியக் கிடப்பதாம். இவற்ருல் கவியின்பம், கல்வியின்பம் என்பன உண்டு. அவை அறிவிஞல் மனத்தின்கண் நிகழ் வன என்பது பெற்ரும்.

இனி, சில கஃவிகள் கூறி அவை எவ்வாறு இன் பம் விளைவிக்கின்றன எனலைக் காண்பாம். ஒரு புலவர் தம் கவியின்கண் ஒரு தலைவனைக் கொணர்ந்து நிறுத்துகிருர். அவன் எதிரே ஒரு மங்கை; அவன் உள்ளத்தைக் கொள்ளை கொண் டவள். அவளையும் அங்கே கொணர்ந்து நிறுத்து கின்ருர். நிறுத்தியபின் அவ்வாண் மகன் அவள் மீது தான் கொண்ட அன்பின் பெருக்கை வெளிப்

படுப்பதாக ஒரு கூற்று நிகழ்விக்கின்றார். அவன் கண்ணாடியுள் தன் முகத்தைக் காண்கின்றான். முகத்தையும் அதில் தனது விழியையும், அதன் நடுவில் கண்மணியையும் அதனுள் தோன்றும் மணியாடு பாவையையும் காண்கிறான். கண்டு ஏ! கண்மணிப்பாவையே! உனக்கு வகுத்த இடத்தை விட்டு நீ பெயர்ந்து செல். அந்த இடம் எனக்கு வேறு காரியத்துக்கு வேண்டும். எதற்கென்றால் இதோ நிற்கும் என் அன்பிற்குரிய காதலி இவளை வைத்துப் போற்றுவதற்கு அதைத் தவிர வேறு இடமில்லை. அதனால் என்,

> ''கருமணியிற் பாவாய்நீ போதாய்யாம் வீழும்
> திருநுதற் கில்லை யிடம்''

எனக் கூறும் இக்கவி எத்தகைய இன்பமூட்டுகின்றது. இவ்வாறு கூறிய புலவர் யார்? இக்கவியைக் கொண்டே அவர் இன்னாரென நீங்கள் தீர்மானியுங்கள் (திருவள்ளுவர்).

ஒரு வேட்டுவச்சேரி. அதில் கட்டழகியான வேடமடந்தை; அரசர் மாளிகையிலுங்கூட அவளைப்போற் காணமுடியாத அழகு. வேட்டையாடச் சென்ற ஓர் அரசகுமரன் அவளைக் கண்டு விடுகிறான். அரசராகிய நமக்குப் பெண் கேட்டால் எளியராகிய இவர்கள் மாட்டோம் என்றா சொல்லுவர்? என்று தனக்குள் மனக்கோட்டை கட்டிக் கொண்டு தன் நகரம் போய்ச் சிலரைப் பெண் பேசி வர அவ்வேட்டுவச்சேரிக்கு அனுப்புகிறான். அதை வினாய அவ்வேடுவர் என்ன கூறி மறுக்கின்றனர் என்று ஒரு புலவர் கூறும் கவியில் உதிக்கும் இன்பைக் கவனியுங்கள். வேடுவர் தூதரைப் பார்த்து ஐயா! அரசர் என்ற மாத்திரத்திலேயே

அஞ்சுபவர்களா நாங்கள்? அரசர் தங்கள் மனைவி யரை வைத்து வாழ்ந்த வாழ்வு எல்லாம் எங்களுக் குத் தெரியாதா? கூறுகிறோம். ஒவ்வோர் அரசர் தம் மனைவிக்குச் செய்த கொடுமை எல்லாம் ஒவ் வொன்ருய்க் கேட்டு வாருங்கள்.

விற்றது ஆர் வேடரா? அரசரா?—அரிச்சந் திரன்.

கலைபாதியோடு வனத்திலே விட்டது யார்? எங்கள் வேடரா—நளன்.

வெஞ்சிறைப் புகவிட்டதார்?—இராமன்.

துகிலுரியவிட்டு விழித்ததார்?—பஞ்ச பாண் டவர்.

இக் கருத்தடங்கிய பாடல் பின்வருமாறு:—

(பதினுன்கு சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்)

“விற்ற தார்கலை பாதி யோடுவ னத்தி லேயழ விட்டதார்
வெஞ்சி றைப்புக விட்ட தார்துகி லுரிய விட்டுவி
ழித்ததா
ருற்ற தாரமும் வேண்டு மென்றினி' மன்னர் பெண்கொள
லொண்ணுமோ வுமிய டாமண மென்ற வாய்கிழித்
தோலை காற்றி லுருட்டடா
வெற்றி யாகிய முத்தி தந்தருள் வெங்கை மாநகர்
வேடர்யாம்
விமல ரானவ ரெமைய டுத்தினி தெங்கண்
மிச்சின்மி சைந்தபின்
பெற்ற வேலர்த மக்கு யாமொரு பெண்வ ளர்ப்பினி
லீந்தனம்
பெற்ற பிள்ளைகொ டுப்ப ரோவிதென் பேய்பி டித்திடு
தூதரே”

என்பதாம்.

கூத்தன் கவிச்சக்கரவர்த்திகள் பாடிய மூவர் -உலாவில்,

"புல்லாத மன்னர் புலாலுடம்பு பேய்வாங்க
ஒல்லாத கூற்றம் உயிர்வாங்கப்—பொல்லார்தம்
தாங்கு மனைவியர்கள் தாலிதனை வாங்க
வாங்கும் வரிசிலைக்கை வாணர்கோன்,"

என்று வாணகோவரையனாகிய சோழ சேனாபதி யைப் பற்றிக் கூறும்போது வாங்குதல் என்ற சொல்லை எத்தனையிடத்தில் எவ்வளவு அழகாகக் கூறுகிறார். இதுவும் ஒரு கவியின்பம் விளைக்கின் றது பாருங்கள். ஒருவன் ஒன்றை வாங்குகிறான். (வாங்குதல்-வளைத்தல்) வில்லை வளைத்து அம்பு தொடுக்கிறான். அதே சமயத்தில் வேறு மூவர் மூன்று வேறு பொருள்களை வாங்குகிறார்கள் என் பது. வில்லை வளைத்து அம்பு தொடுத்தானோ? இல்லையோ?

அக்கணத்திலே பகைவர் உயிரைக் கூற்றம் தனக்கென வாங்குகிறான். பேய்கள் தமக்கென அவர் உடம்பை வாங்கிக் கொள்கின்றன. அவர் தம் மனைவியர் தம் தாலியை வாங்குகின்றனர் என் பது நயம்.

**உவமைச் சுவை**

கவியின்பத்தில் உவமை நயம் ஒரு இன்பம் தரும் பகுதியாகும். நாம் சொல்லக் கருதும் ஒரு பொருள் இருக்குமே அது **உவமேயம்** எனப்படும். அதை விளக்கும் பொருட்டு எடுத்துக் கூறுவது **உவமானம்** எனப்படும்.மாணவர்கள் விளையாட்டா கப் பேசும்போது இவ்வுவமைகளைக் கையாளுவர். இவன் தலையைப் பார் பனங்காயைப் போல எனக் கூறுவர். அதே போலக் கவிகளிற் புலவர் கூறும் உவமையும் ஓர் இன்பம் விளைப்பதாம். நாலடியார்

என்ற நூலில் வரும் உவமைகளில் ஒன்றைக் கூறு வேன்:—கீழ்மக்கள் நம்மைத் தீய சொல்லால் வைதால் நாமும் அதற்கு எதிராகத் தீயசொல் சொல்லக்கூடாது என்பதற்கு நாய் கடித்தால் நாமும் கடிப்பது உண்டா என்று.

> ''கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
> பேர்த்துநாய் கௌவினு ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
> கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
> மேன்மக்கள் தம்வாயான் மீட்டு.''

எனக் கூறப்படுகிறது. இதுபோலவே திருக்குற ளிலும் உவமையின்பங்கள் பல உண்டு.

> ''தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலையி னிழிந்தக் கடை.''

இதில் வரும் உவமையைக் கவனியுங்கள். மயிர் தலையிலுள்ளபோது அதற்கு வாசனைத் தயிலமெல் லாம் தடவுவர். மகளிராயின் மணமலர்கள் கொண்டு அதற்கு வாசனையூட்டி அழகு படுத்து வர். மாணவர்களும் கண்ணுடியாற் பார்த்துச் சீப்பாற் சீவி அடிக்கடி அதனை ஒழுங்குபடுத்து வார்கள். அத்தகைய சிறப்பு அது தலையில் இருக்குமட்டுந்தான். அதில் ஒன்று கீழே விழுந்தால் அது மிக மிக இழிந்த பொருளாகக் கருதப்படு கிறது. உண்ணும் சோற்றிலும் பிற பொருளி லும் அது கிடந்தால் அவற்ரேடது ஒதுக்கப்படு கிறது. அது போலவே நமது நிலைமை தவரும லிருக்கும்வரை நமக்கு யோக்யதை உண்டு. நிலைமை தவறிஞல் நாம் அயோக்கியராகக் கருதப்பட்டு மயிருக்குச் சமமாவோம். இவ்வுவமையின்பத்தைக் கவனியுங்கள்.

முற்றும்.

# மணிவாசகர் நூலகத்தின் மணியான

## வெளியீடுகள்.

---

1. அன்பு நெறியினர் வாழ்க்கை — 2-00
   வித்துவான். சுந்தரேச வாண்டையார்.
2. நிலமும் உரமும் — 1-50
   மா. கலியபெருமாள்
3. சதகங்களின் சிறப்பு — 3-50
   இளங்கீரன்
4. இலக்கியப் பரிசு — 1-50
   வித்துவா[illegible]குமாரசாமி
5. இலக்கியமும் விமர்சனமும். — 3-50
   கோதண்டராமன் M. A., B. L.
6. கல்வெட்டுக்கள் தரும் கருத்துக்கள் — 3-50
   வித்துவான். சுந்தரேச வாண்டையார்
7. வாசகத்தில் வள்ளுவம் — 1-50
   லால்குடி அ. நடேச முதலியார்

மணிவாசகர் நூலகம்,

சிதம்பரம்.